

# நான்
# ஒரு டாக்டர் ஆக
# விரும்புகிறேன்

நீங்கள் இவளைப் படிக்க வைக்க வேண்டும். அதற்கு பணம் தேவை. பணம் திட்டமிட்ட சேமிப்பின் மூலமே கிடைக்கும். பஞ்சாப் நேஷனல் பாங்கில் ஒரு சேவிங்ஸ் கணக்கு அல்லது ரிகரிங் டிபாசிட் திட்டத்தின் கீழ் சேமிக்கத் தொடங்குக. அவ்விதம் சேர்ந்த தொகையைக் கொண்டு இவளது விருப்பத்தைப் பூர்த்தி செய்யலாம்.

# பஞ்சாப் நேஷனல் பாங்க்

PR-PNB-6715 TAM-I

# ஸ்பென்ஸர் 'டீ' தான்
## சந்தேகமில்லை!

ஸ்பென்ஸர் 'டீ'யின் சுவையும்,
மணமும் தனிப்பட்டவை.
தரத்தை விரும்புவோர்
அனைவரும் கேட்டு வாங்குவது
ஸ்பென்ஸர் தேயிலையைத்தான்.

ஸ்பென்ஸர் 'கிரீன்லேபல்'
'ரெட் பாண்ட்' மற்றும்
'பீகோ டஸ்ட்' ஆகியவை
நீலகிரியின் உயர் மிகு
சாரல்களில் பயிராகும்
தேயிலை ரகங்கள்.

உங்கள் தேவைக்கேற்ப 100, 250
மற்றும் 500 கிராம் கார்டன்களில்
கிடைக்கின்றன.

**ஸ்பென்ஸர்
அண்டு கோ.,
லிமிடெட்**
சென்னை மற்றும் கிளைகள்







FDSST842

# நெஸ்கா∴பேயின்
# ருசியிலிருந்தே தெரியும்:

**1** அது தேர்ந்தெடுக்கப்பட்ட தென்னிந்திய பீபெரி காபிக்கொட்டையிலிருந்து தயாரிக்கப்படும் 100% தூய காபி

**2** அது இன்ஸ்டன்ட் காபி தயாரிப்பதில் உலகிலேயே அதிக அனுபவம் உடையவர்களால் தயாரிக்கப்படுகிறது.

**3** உங்கள் ருசிக்கேற்றபடி 'ஸ்ட்ராங்காகவோ' 'லேட்டாகவோ' போட்டுக் கொள்ளக்கூடியது.

குறைந்த அளவு: ஸ்பூன் நிரம்ப: குவித்து:

நெஸ்கா∴பேயின் ருசியிலிருந்து தெரியவராத விஷயம்:

**4** அது சிக்கனமானது. நேரடியாக கப்பிலேயே தயாரித்துக் கொள்ளக் கூடியதால் அதை தேவையான அளவு மட்டுமே போட்டுக் கொண்டால் போதும்.

NESTLÉ

ஒரு நெஸ்லே தயாரிப்பு






**NESCAFÉ*** நெஸ்காஃபே—தனிச்சிறப்புள்ள தரமான காபி!

* நெஸ்கா∴பே என்பது நெஸ்லேயின் இன்ஸ்டன்ட் காபியைக் குறிக்கும் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்காகும்

NCE 4248 A

# கல்கி ராஜாஜிமலர்

## பொருளடக்கம்

பிலவங்க, கார்த்திகை 24 - டிசம்பர் 10



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே: சம்பவங்களும் கற்பனையே.




பசு ஒன்று மாமிசம் புசிப்பதாகச் செய்தி கிடைத்துள்ளது!

ஆம், கழுதையின் குளம்புகளைக் காண்கிறேன்





தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்

மலர் 27 ★ இதழ் 19



# தொண்டுக்குத் தொண்ணூறு

இவ்வாண்டு ராஜாஜியின் தொண்ணூறாவது ஜயந்தியைக் கொண்டாடும்போது நம் உள்ளத்தில் அலாதியானதொரு நிறைவு ஏற்பட்டிருக்கிறது.

சென்ற ஆண்டு ராஜாஜியின் பிறந்த தின இதழில், ''1967ஆம் ஆண்டுத் தேர்தலில் நாம் சுதந்திர வழிக்காக வாக்கு அளிக்கப் பிரதிக்ஞை கொள்வதே அவருக்கு நாம் அளிக்கக்கூடிய தலைசிறந்த பிறந்தநாள் அஞ்சலியாகும். இதுவே அவருக்கு நாம் செய்கிற கைம்மாறு'' என்று எழுதினோம். அந்தக் கைம்மாற்றினைத் தேசம் பெருமளவில் செய்து விட்டது. அதிலும் தமிழகம் தலைசிறந்து நின்று விட்டது என்பதால் இவ்வாண்டு ராஜாஜி ஜயந்தியின்போது நாம் முன்னைப் போதையும்விட மகிழ்கிறோம்.

'சுதந்திர வழிக்கு வாக்களிப்பது' என்றால் சுதந்திரக் கட்சிக்கு வாக்களிப்பது என்று பொருள் கொள்வதற்கில்லை. ஆனால் அக்கட்சியின் ஆதரவு பெற்ற கூட்டணிகளுக்கு அளிக்கும் வாக்கு ராஜாஜிக்கே அளிக்கும் வாக்கு என்ற உணர்வோடு மக்கள் தங்கள் கடமையைச் செலுத்தியிருப்பது கண்கூடு. 'சுதந்திர வழி' என்பது சுதந்திரக் கட்சியோடு நின்று விடுவதல்ல; அதன் அம்சங்களை விவேகமுள்ள எந்தக் கட்சியும் எடுத்துக் கொள்ளத்தான் வேண்டும் என்பது உறுதியாகிவிட்டது. இன்று பெர்மிட் — லைசென்ஸ் முறை எவ்வளவோ தளர்த்தப்பட்டிருக்கிறது. நான்காம் திட்டத்தை ஆட்சியாளரே ஒன்றரை ஆண்டுகள் தள்ளிப் போட்டிருக்கிறார்கள். நிலவரி நீக்கத்தைப்பற்றியும் சிந்தனை வலுத்துள்ளது. கம்பெனி நன்கொடைத் தடைக்கும் வழி பிறக்கலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டுள்ளது.

தனியொரு மனிதரின் அந்தரங்க சுத்தம் ஒரு மாபெரும் துணைக் கண்டத்தின் சூழ்நிலையையே தூய்மைப் படுத்திவிடும் என்ற அற்புதத்தை ஓரளவு கண்டு விட்டோம். அனைத்தையும் ஆண்டவனின் லீலையாகக் காணும் பரிபக்குவம் பெற்ற ராஜாஜி. அந்த லீலைக்குள்ளும் தமது கடமையை மதித்து அல்லும் பகலும் உழைக்கும் செல்விக்கு பலன் விளையாமற் போகுமா?

ஆயினும், தொண்டே உருவான இத்தொண்டு கிழவரிடம் தொண்ணூறுண்டுக்குப் பின்னும் கடின உழைப்பை எதிர்பார்ப்பது நியாயமல்ல. தம்மைவிட வயதில் சிறிய ஒரு தலைவரை மக்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும் என்று சமீபகாலமாக ராஜாஜி எழுதி வருகிறார். யுக யுகாந்திரங்களுக்கு ஒரு முறையே தோன்றக்கூடிய இணையற்ற தலைவர் ராஜாஜி என்பதால் அவரே நமக்குத் தலைமை தாங்க வேண்டும் என்று நாம் விரும்புவது இயற்கையே. எனினும், அதே சமயத்தில் நமக்கு உள்ள பொறுப்பையும் நாம் ஆற்றியாகவேண்டும். அதாவது ராஜாஜியின் வழியில் நிற்பவர்கள் இன்றைவிடப் பன்மடங்கு உத்வேகமும், ஊக்கமும் பெற்று அவரது சத்திய இலட்சியங்களை மற்றோரிடமும் பரப்பி அவரது பளுவைக் குறைக்க வேண்டும். கர்ம யோகியான ராஜாஜியால் எத்துணைப் பிராயமாயினும் பணியை விட முடியாது என்பது வாஸ்தவம். ஆனால் அப்பணி அரசியலில்தான் இருக்க வேண்டும் என்பதில்லை. அவரது இயல்போடு, இரத்தத்தோடு கலந்துவிட்ட இறைபணியில் அவர் ஈடுபடுவாராயின், எவ்வளவு வயோதிகத்திலும் அது அவருக்கு ஒரு பாரமாக இராது. அரசியல் என்பது வாழ்வின் ஓர் அம்சம்தான். ராஜாஜியோ வாழ்வுக்கே பொருள் தரும் தத்துவங்களை, ஞானத்தை, பக்தியை விளக்க வல்ல ரிஷிபுங்கவர். நாம் அரசியலில் அவரது பளுவைக் குறைக்காவிடில் அவரது திவ்விய வாழ்வு தரக்கூடிய முழுப் பயனையும் பெறாமல் போனதாகவே ஆகும். எனவே, ராஜாஜியின் ஜயந்தித் திருநாள் நம்மைத் தொண்டுக்கு அர்ப்பணித்துக் கொள்ளும் பெருநாள் என பாவிப்போமாக!

# ஏமாந்துவிடக் கூடாது!

ஆட்சி மொழி மசோதா நல்லெண்ணத்திலேயே தயாரிக்கப்பட்டிருக்கலாம். எனினும், ஹிந்தி பேசாதவர் ஏமாந்து போய், தமது கோரிக்கைகள் முற்றிலும் திருப்தி செய்யப்பட்டு விட்டதாக எண்ணவே அது இடம் செய்து விட்டது.

ஆங்கிலம் தற்போதும், இனி பல ஆண்டுகளுக்கும் சில காரியங்களுக்கு உபயோகமாகும் என்று கூறியிருப்பதும், ஹிந்தி பேசாத ராஜ்யங்களுக்கும் தில்லிக்கும் இடையிலும் ஹிந்தி பேசாத ராஜ்யங்களுக்கும் மற்ற ராஜ்யங்களுக்கும் இடையிலும் ஆங்கிலத்தில் தகவல் தொடர்புகள் இருப்பதற்கு இடமளித்திருப்பதும் வரவேற்கத் தக்கனவே. ஆங்கிலத்துக்கு இடமே இன்றி 'ஹிந்திக்கு மட்டும் அரியாசனம்' என்ற நிலையை இம் மசோதா ஏற்கவில்லை. ஆயினும் ஆட்சி மொழியாக ஹிந்தியை ஏற்று ஆங்கிலமும் சில காரியங்களுக்கு அதனுடன் இருக்கலாம் என்பதுதான் மசோதாவின் உட்கிடை. இவ்வாறு ஆங்கிலம் கூட்டு மொழியாக இருப்பதும் நிரந்தர ஏற்பாடு அல்ல. ஹிந்தியை இடைக் காலத்தில் அபிவிருத்தி செய்து எப்படியாவது எல்லாச் சட்டசபைகளும் அதை ஏற்குமாறு செய்ய முயற்சிகள் எடுக்கப்படும் என்பது திண்ணம்.

இன்று நாட்டில் சமமாகப் பரவி, எவருக்கும் எவ்வித பாரபட்சமும் செய்யாத ஆங்கில மொழியை, தன் பணியைச் சிறப்பாகச் செய்து வரும் ஆங்கில மொழியை அந்நியம் என்று பெயர் சூட்டி அப்புறப்படுத்திவிட்டு, நாட்டின் ஒரு பகுதியில் மட்டும் வழங்கும் ஹிந்திக்கு ஆட்சி மொழி அந்தஸ்தை இன்றும் என்றுமே தர வேண்டிய அவசியமில்லை. இரண்டு மொழிகளை வைத்துக்கொண்டு மொழிபெயர்ப்புகளுக்காகக் காலமும் பொருளும் ஏராளமாகச் செலவிடுவது எந்த விதத்திலும் சுதேசப் பற்றாகி விடாது. எல்லாவற்றையும் விட இது ஐக்கியத்துக்கு அணுவளவும் உதவாது. இப்போது ஹிந்தி பேசும் ராஜ்யங்களுக்கிடையே ஹிந்திதான் ஆட்சி மொழி; மற்றவற்றிடையே ஆங்கிலம் என்ற ஏற்பாட்டுக்கு வழி செய்தாகி விட்டது. அதாவது ஹிந்தி ராஜ்யங்கள், ஹிந்தி பேசாத ராஜ்யங்கள் என்று பாரதத்தை இரண்டாக்கி விட்டார்கள். ஹிந்தி பேசாதவர்கள் தற்போதைக்கு ஏதோ சில சலுகைகள் பெற்றிருந்தாலும், என்றோ ஒரு நாள் தாங்கள் ஹிந்தியின் ஆதிக்கத்துக்கு உட்பட்டாக வேண்டும் என்று குமுறியபடிதான் இருப்பார்கள். இத்தகைய உணர்ச்சி தேச ஒற்றுமைக்கு நிச்சயம் ஊறு விளைவிக்கும்.

எனவே ஆட்சி மொழிப் பிரச்னை என்று நாமாகச் சிருஷ்டித்துக் கொண்ட சிக்கலை இப்போது கிடப்பில் போட்டு விட்டு, இத்தனைக் காலமாக இருந்துவந்த நடைமுறையையே பின்பற்றுவதுதான் அறிவுடைமை.

இச்சமயத்தில் நேருஜியின் வாக்குறுதி நிறைவேற்றப்பட்டதாக ஹிந்தி பேசாத மக்கள் திருப்திப்பட்டு விட்டால் பிற்பாடு இரண்டாந்தரப் பிரஜையாவதற்குத் தயாராக வேண்டியதுதான். எந்த வாக்குறுதியும் இப்போது விஷயமல்ல. நாட்டில் எல்லோரும் சம நிலையில் இருக்க வேண்டும்; பயனுள்ள ஒரு கருவி புறக்கணிக்கப்படக் கூடாது; வேலைகளை இரட்டிப்பாக்கிப் பொருள் விரயமும் கால விரயமும் செய்யக் கூடாது; தேசத்தின் ஐக்கியம் காக்கப்பட வேண்டும் என்பனவே முக்கியம்.

# வங்கம்: தேசத்துக்கே மானபங்கம்

பாரத நாடே பெருமைப்படத் தக்க அற்புதங்களைப் புரிந்துள்ள வங்க நாடு இன்று நமக்குத் தலைகுனிவை ஏற்படுத்தும் வழியில் சென்று வருகிறது.

மேற்கு வங்க அரசியல் சிக்கலைப் பற்றியும், சபாநாயகர் உரிமை, கவர்னரின் உரிமை, மத்திய சர்க்கார் கடமை இவை பற்றியும் நாம் குறிப்பிடவில்லை. இவற்றையெல்லாம் ராஜநீதி வல்லுநர்கள் ஆலோசனை செய்து தீர்த்துவிடலாம். ஆனால் அங்கு அரசியல் கட்சிகளின் முக்கியமான புள்ளிகளிடையே தோன்றிவிட்ட துவேஷத்தையும், மாற்சரியத்தையும் யார் தீர்க்க முடியும்? சட்டசபையில் முதன் மந்திரிக்கு ஏற்பட்ட அவமதிப்பையும் தாக்குதலையும் பற்றிப் படிக்கும்போது சொல்லொணாத் துயரம் ஏற்பட்டது. மக்களுக்காகச் சட்டம் செய்ய வேண்டியவர்களே பிரச்னைகளைப் புத்திபூர்வமாகப் பேசித் தீர்க்காமல், பௌதிக பலத்தினால் முடிவு காண முயலுவது எத்தகைய இழி செயல்?

கம்யூனிஸ்ட்களை ஆதரித்ததின் விபரீத விளைவை வங்கம் அநுபவிக்கத் தொடங்கி விட்டது. என்றாலும் அந்த அநுபவத்தாலேயே அது நல்லறிவு பெறும் என்ற நம்பிக்கைக் கீற்றும் உதயமாகியிருக்கிறது. தற்போது வங்கத்தில் பல கிளர்ச்சிகள், கடையடைப்பு முதலியன ஏற்பட்டிருந்தாலும் தேசம் பயந்த அளவுக்கு ரத்தக் களறி ஏற்பட்டுவிடவில்லை. கம்யூனிஸ்டுகள் நினைத்த அளவுக்கு 'பந்த்', 'ஹர்த்தால்' ஆகியன வன்முறைப் போராட்டங்களாகி விடாமல் பிசுபிசுத்துப் போனதாகவே இன்று வரை செய்திகள் கூறுகின்றன. இதிலிருந்து மக்களே கம்யூனிஸ்டுகளின் மயக்கு சக்தியிலிருந்து விடுபட்டுப் பிரத்தியட்ச உணர்வு பெறத் தொடங்கியிருக்கிறார்களோ என்ற நம்பிக்கையும் எழுகிறது.

ஆயினும் இதை மக்களின் பிரச்னையாக மட்டும் விட்டுவிடுவதற்கில்லை. ஜனநாயகம் நல்ல முறையில் செயல் படாமல் செய்வதற்கே ஜனநாயகப் போர்வையைப் போர்த்துக்கொண்டு உலவும் கட்சிகளைக் கண்டிப்புடன் கையாள வேண்டியது தில்லி சர்க்காரின் அவசரக் கடமை.




**டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன்**

நமது முதிர்ந்த அரசியல் தலைவர்களில் முதன்மை ஸ்தானம் வகிப்பவர் ராஜாஜி. சுதந்திரப் போராட்டத்தில் பங்கு கொண்டவர். சுதந்திரத்துக்குப் பின் தேசத்தின் பல உயர்ந்த பதவிகளை வகித்தவர். மாகாண முதன் மந்திரியாகவும் கவர்னராகவும் மத்திய மந்திரியாகவும் பாரதத்தின் தலைமை அதிபதியாகவும் இருந்தவர். நாம் தவறான வழிகளில் செல்கிறோம் என்று அவர் கருதும்போது நம்மைக் கண்டிப்பதற்கான உரிமையை அவர் தமது அநுபவத்தாலும், உள்ளூற அமைந்த நல்லுணர்ச்சியாலும் பெற்றிருக்கிறார்.

தேசத்தில் மேன்மேலும் சட்டம் சிதைந்திருப்பது கண்டு அவர் கலக்கம் அடைந்திருக்கிறார். கப்பல்கள் கடலில் நிற்கும்போது அவற்றைச் சங்கிலி போட்டுப் பிணைப்பது போல் நம்மைத் தருமத்துடன் பிணைக்கும் சங்கிலிகளை நாம் இழந்துவிட்டோம் என்று அவர் கருதுகிறார். ஸயன்ஸிலும் நுட்பத் தொழிலியலிலும் நாம் மகத்தான முன்னேற்றம் அடைந்திருப்பினும் சீலத்திலோ, பண்பாட்டிலோ உயரவில்லை. இவ்வுயர்வை அளிக்கக் கூடிய நமது புராதன இலக்கியங்களில் பொதிந்துள்ள ஞான சக்தியில் அவருக்குப் பெரு நம்பிக்கை உண்டு. அவ் விலக்கியங்களை அவர் நமக்கு விளக்கியும் இருக்கிறார். ஸயன்ஸிலும், நுட்பத் தொழிலியலிலும் முன்னேற்றம் காணும் இந்நாட்களில், வானவெளியை வெற்றி கொள்வதற்கும் சமுத்திரங்களைப் பாலம் போட்டிணைக்கவும் நாம் முயலும் இந்நாட்களில் புராதன ஞானமே நமக்கு அவசியமான மாற்று மருந்தாகும் எனக் கருதுகிறார் ராஜாஜி.

எல்லாவித பட்சபாதங்களையும் நாம் விடவேண்டும் என்கிறார் ராஜாஜி. அசாத்தியமான சிந்தனைத் தெளிவும், நேர்மை நிறைந்த மதியும் பெற்ற அவர், தொன்றுதொட்ட காலத்திலிருந்து நமக்குச் சில பழக்க வழக்கங்கள் வந்திருக்கின்றன என்பதற்காக மட்டும் அவற்றை ஏற்றுக் கொண்டு விடுவதில்லை.

இழந்த வாழ்வை நாம் மீண்டும் பெற முடியாது; வாழ்க்கைப் பயணத்தில் நாம் எந்த வழியில் வருகிறோமோ அதில் திரும்பிப் போக முடியாது; மனிதன் தனது எதிர்காலத்தை உருவாக்கிக் கொள்ளும் ஆற்றல் படைத்தவன் என்று நம்பும் உண்மையான ஜனநாயகவாதி ராஜாஜி. நமது எதிர்காலம் நாசமாயின் அது கிரகங்களின் தோஷமில்லை; நமது தோஷம்தான்.

ஜனநாயகம் என்பது மக்கள் ஏற்படுத்தும் அரசாங்கம் மட்டும் அல்ல; மக்களே பங்கு கொண்டு நடத்துவது அது. இதற்குத் தனி மனிதனுக்குரிய சுதந்திரங்களை மதிப்பது அவசியம். கம்யூனிஸமும்கூட மகத்தான தனிமனித சுதந்திர சகாப்தத்தை உண்டாக்கப் போவதாகத்தான் உரிமை கொண்டாடுகிறது. தனிமனித சுதந்திரத்தைப் போற்றுபவர் ராஜாஜி.

கொள்கைப் பிடிவாதம் அறிவு முதிர்ச்சிக்கு அடையாளமாகாது; கருத்து மாறுபாடு கொள்ளும் உரிமையை ஜனநாயகத்தில் ஒடுக்கவே கூடாது என்பதை உணர்த்துகிறார்.

மக்கள் விவேகத்தை நாடி, தருமத்தைப் பின்பற்றும் வரையில் அழியவொண்ணாத இலட்சியங்களுக்காக உறுதியாக நிற்பவர் ராஜாஜி. தேசத்துக்கு அவரது சேவை வாழ்வு மேலும் பல்லாண்டுகள் கிட்ட வாழ்த்துகிறோம்.

★★★ "இன்று மக்களுக்கு ஆண்டவன் தந்துள்ள ஒரு காவலர் ராஜாஜி" என்று அவரைப் பற்றி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் குறிப்பிடுவது வழக்கம். பாரதத்தின் தலைமைப் பதவியை வகித்ததிலும், பாரத ரத்தினங்களாகத் திகழ்வதிலும், தத்துவஞான மேதையிலும் இவ்விரு பெரியோருக்கும் தனிப் பொருத்தமுண்டு. ★★★



1. 1942ம் ஆண்டில் ராஜாஜி சட்டசபை காங்கிரஸ் தலைமைக்கு வரக்கூடாது என்று ஆட்சேபனை எழுப்பிய காமராஜரையும், முத்துரங்க முதலியாரையும், சத்திய மூர்த்தியையும் ஹிட்லராகவும், முஸோலினியாகவும், டோஜோவாகவும் சித்திரித்த கார்ட்டூன். (கல்கி: 16-6-42)





2. 'வெள்ளையனே வெளியேறு' திட்டத்தின்போது காங்கிரஸி லிருந்து வெளியேறிய ராஜாஜி 1942 இறுதியில் தில்லிக்குச் சென்றார். நெருக்கடியைத் தீர்க்கும் சாவி அவரிடமிருக்கிறது என்று குறிப்பிடும் கார்ட்டூன். (கல்கி: 10-11-42)

3. மக்களுக்கும் பிரிட்டிஷ் சர்க்காருக்குமிடையே சமரசம் ஏற்படுத்த ராஜாஜி கூறிய யோசனையை வைஸ்ராய் லின்லித்கோ ஏற்காதபோது வெளியான கேலிச்சித்திரம். (கல்கி: 20-11-42)

4. 1943 தொடக்கத்தில், யுத்த காலத்தின்போது காங்கிரஸ் எப்படி நடந்துகொண்டு பிரிட்டிஷ் ஆட்சியினரின் !அன்பைப் பெற வேண்டும், முஸ்லிம் லீகுடன் எப்படி சமரசம் காணவேண்டும் என்பதைக் குறித்து ராஜாஜி கூறிய ஆலோசனைகளை மற்ற காங்கிரஸ் தலைவர்களும், லீகினரும், பிரிட்டிஷ் அரசியலாரும் ஏற்காமல் தீவிர வாதங்களிலே இறங்கியிருந்தனர். (கல்கி: 20-1-43)

# கார்ட்டூன் சொல்லும் கதை






5. வெள்ளையர் எதிர்ப்பு இயக்கம் வன்முறையில் திரும்பியதால் காந்தியடிகள் சிறையில் இருபத்தோரு நாள் உண்ணாவிரதம் தொடங்கினார். காந்திஜியின் திட்டமே வன்முறையானது என்று பிரிட்டிஷார் சாதிக்கப் பார்த்தனர். அப்போது அவர்களுக்கு அறிவு விளக்கம் ஏற்படுத்தவும், மக்கள் வன்முறைக்குத் திரும்பாமல் இருக்கவும் இருசாராருடனும் அயராது பாடுபட்டார் ராஜாஜி. (கல்கி : 10-3-43)





6. 'வெள்ளையனே வெளியேறு' இயக்கம் தொடங்கியதிலிருந்து சிறை வைக்கப்பட்ட காந்திஜியைப் பார்க்கவொட்டாமல் செய்து அதற்கு லின்லித்கோ கூறிய காரணங்களைத் தகர்த்தார் ராஜாஜி. (கல்கி 10-4-43)

7. அரசியல் நிர்ணய சபையின் இரண்டாவது கூட்டத்தில் ராஜாஜி பாகிஸ்தான் பிரச்னையை அலசினார். (கல்கி 9-2-47)





8. சுதந்திர பாரதத்தின் கவர்னர் ஜெனரலாக ராஜாஜி நியமனமானபோது அவரைத் திறமையும் தொண்டும் இரு சிறகுகளாகக் கொண்டு, சத்திய சமநிலை என்ற சம்பத்தைத் தாங்கி வரும் பட்சியாகச் சித்திரித்த கார்ட்டூன். (கல்கி 20-6-48)

9. 1952-ல் சென்னை முதல்வர் பதவியேற்ற ராஜாஜி இம் முடிவுக்கு வர ஒரு நாள் அவகாசம் கேட்டிருந்தபோது வெளியான சித்திரம். (கல்கி : 6-4-1952)






10

ஹிரோஷிமாவில் முதல் அணு குண்டு வெடிக்கப்பட்டதிலிருந்து அதை எதிர்த்துக் குரல் எழுப்பிய ராஜாஜி 1962-ல் அமெரிக்கா சென்று அணு ஆயுதப் பரிகரணத்துக்குத் தீவிரமாக முயன்றார்.

(கல்கி: 14-10-1962)

11

உத்தமப் பண்புகளில் வேர் விட்டு, நாலு துறைகளில் சேவை விழுதுகள் பரப்பும் ராஜாஜியின் எண்பத்தைந்தாவது ஜயந்தி இதழில் வெளியான கார்ட்டூன்.

(கல்கி: 9-12-62)






12

12. கல்கியின் 1963-ம் ஆண்டு தீபாவளி மலரில் திரைப் படங்களின் பெயரை வைத்துத் தீட்டப்பட்ட பல கார்ட்டூன்களில் இது ஒன்று. தனி மனித உரிமைகளுக்காக ராஜாஜி ஸ்தாபித்த சுதந்திரக் கட்சிக்கு மக்கள் ஆதரவு அதிகமாகி வருவதைக் குறிப்பிடுவது.

13. மூன்றாண்டுகளுக்கு முந்தைய ராஜாஜி ஜயந்தி இதழில் வெளியான இந்தச் சித்திரம் இன்றும் நம் அபிலாஷைக்கு உருத் தாங்குகிறது.

13



## ராஷ்டிரபதியுடன் ராஜாஜி

சுதந்திரக் கட்சித் தலைமை பீடத்தின் கூட்டத்துக்காகச் சென்ற மாதக் கடைசியில் தில்லி சென்றிருந்த ராஜாஜி, ராஷ்டிரபதி மாளிகையில் டாக்டர் ஜாகிர் ஹுஸைன் அவர்களின் அன்பு நிறைந்த உபசரணையைப் பெற்றார்.

மேலே: ராஷ்டிரபதியும், ராஜாஜியும் உரையாடுகின்றனர்.

கீழே: ராஜாஜியின் கையைப் பிடித்துக் கொண்டு வாயில் வரையில் வருகிறார் ராஷ்டிரபதி.

அடுத்த பக்கத்தில்: அரசியல் சாஸனத்தில் அரசியல் நிர்ணய சபைத் தலைவர் ராஜன் பாபுவும், அன்றைய பிரதமர் நேருஜியும் கையொப்பமிடுவதை ராஜாஜி உள்ளிட்ட மற்ற தேசத் தலைவர்கள் காண்பதாகத் தீட்டப்பட்ட சித்திரத்தை ராஜாஜியும், ஜாகிர் ஹுஸைனும் பார்வையிடுகின்றனர்.





# ராஜாஜியின் கருத்துக்கள்

தற்போது வெளியாகியுள்ள ஆட்சிமொழி மசோதாவை இந்திய சர்க்கார் வாபஸ் பெற வேண்டும் என விரும்புகிறேன். தூங்குகிற நாயை மிதித்து எழுப்ப வேண்டியதில்லை.

எதிர்காலத்தில் ஒரு நாள் ஹிந்தியை அகில இந்திய ஆட்சி மொழியாக ஏற்க வேண்டும் என்ற நிபந்தனையில் ஹிந்தி பேசாதவர்களைச் சிக்க வைக்கிறது இம்மசோதா. இது தமிழ் நாட்டு மக்கள் ஏற்க முடியாத நிபந்தனை. தற்காலத்துக்கு இம்மசோதா சில அம்சங்களில் நமக்குச் சிறிது இடம் கொடுக்கிறது எனினும் ஆங்கிலமே அகில இந்திய ஆட்சி மொழியாக நீடிக்கப்பட வேண்டும் என்ற தமிழக முதன் மந்திரியின் கோரிக்கையை மசோதா பூர்த்தி செய்யவே இல்லை. சிறிது விட்டுக் கொடுப்பதற்கு இம்மசோதா ஒரு சமிக்ஞை என்ற அளவில் அதை வரவேற்கலாம். ஆயினும் ஹிந்தி பேசாத ராஜ்யங்களின் அங்கீகாரத்தைப் பெற்று மசோதாவை நிறைவேற்றிவிட்டால் எதிர் காலத்தில் ஹிந்தியை அவர்கள் ஏற்றுக் கொண்டேயாக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும். இது தி.மு.க.அரசாங்கத்தின் கருத்து அல்ல; தமிழ் மக்கள் சம்மதிக்கக் கூடியதுமல்ல.

எனவே குழப்பமும் சிக்கலும் நிறைந்த இப்படிப்பட்ட ஒரு சட்டத்தை வாபஸ் பெறுவதே சிலாக்கியம். சுதந்திரம் வந்த பிறகும், 1947–48–49–50–51 முதலிய ஆண்டுகளில் செய்து வந்தது போல இனியும் நீடிப்பதில் எவ்விதத் தடையும் இல்லை. அவ்வாறு செய்து, இதைவிட உடனடியாக நடவடிக்கை தேவைப்படும் பொருளாதாரப் பிரச்னைகளையும் மற்ற பிரச்னைகளையும் கவனிப்பாராக.

ஃ ஃ ஃ

தேர்தல்களில் அரசியல் கட்சிகள் உபயோகப்படுத்திக் கொள்வதற்காக அவற்றுக்குக் கம்பெனிகள் நன்கொடை அளிப்பதைத் தடை செய்ய வேண்டும் என்று பல காலமாகக் கோரப்பட்டு வந்திருக்கிறது. ஆயினும் காங்கிரஸ் கட்சியும் இந்திய சர்க்காரும் இம்முயற்சியை உறுதியாகத் தடுத்து வந்திருக்கின்றனர். எனவே, கம்பெனி நன்கொடைகளைத் தடை செய்யவேண்டுமென இப்போது இந்திய சர்க்கார் உயர் மட்டத்தில் முடிவு செய்திருப்பதாக 'ஹிந்து'வில் காணும் செய்தி மகிழ்ச்சியூட்டுகிறது.

இத்தனை ஆண்டுகளாகக் காங்கிரஸ் கட்சி தன்னையே பதவியில் நிலைநாட்டிக் கொள்வதற்காகச் சேகரித்த பெரும் நன்கொடையையெல்லாம் உபயோகப்படுத்திக் கொண்டபின் இத்தடையைக் காங்கிரஸ் ஏற்றுக்கொள்ளப் போகிறது! எனவே இப்போது நன்கொடைத் தடைக்கு ஆதரவாகக் காங்கிரஸ் சமிக்ஞை காட்டுவதால் யாரிடமும் நல்லபிப்பிராயம் ஏற்படுத்த முடியாது. எண்பது வயதுக் கிழவர் தாம்பத்திய சுகத்தை விடுத்து, சந்நியாசம் வாங்கிக் கொள்வது போன்றதே இது

ஆரம்பத்திலிருந்தே இடை விடாமல் கம்பெனி நன்கொடைக்குத் தடை கோரி வந்தது சுதந்திரக் கட்சி. அதற்கும் கம்பெனி நன்கொடைகளால் சிறிது உதவி கிடைத்து வந்தது. ஆயினும் 'ஹிந்து' கூறுவது போல் இந்த நன்கொடையில் அது காங்கிரஸுக்கு மிக மிகப் பின்தங்கியே நின்றது. சுதந்திரக் கட்சிக்கு நன்கொடை தந்தவர்களில் அநேகமாக அனைவருமே அதற்குத் தந்த சொற்பத் தொகையை விடப் பன்மடங்கைக் காங்கிரஸுக்கு அளித்து, தாங்கள் சுதந்திரக் கட்சிக்குத் தந்த உதவியைப் பயனற்றதாக்கினர்.

ஃ ஃ ஃ

'வங்கத்தில் இன்றுள்ள கூட்டணி சர்க்காருக்குப் பதிலாகக் காங்கிரஸாரும், காங்கிரஸிலிருந்து பிரிந்த புரட்சியாளரும் கொண்ட சர்க்காரை ஏற்படுத்த முயன்றால், அந்தப் புதிய சர்க்கார் கம்யூனிஸ்டுகள் தூண்டி விடும் கிளர்ச்சிகளால் அழிவு படுவதிலேயே முடியும்' என்று நவம்பர் 26ந் தேதி இதழில் எழுதினேன். மீண்டும் டிசம்பர் மூன்றாம் தேதி இதழில் பின்வருமாறு கூறினேன்:

கம்யூனிஸ்ட் கட்சி உண்டாக்கும் ஒழுங்கினத்துக்குப் பிரதியாக அரசாங்கமும் வன்முறை நடவடிக்கைகள் எடுத்தாலே (வங்கத்தில்) நிர்வாகம் நடத்த முடியும், பத்திரிகைச் செய்திகளிலிருந்து நான் பார்த்தவரை டாக்டர் கோஷ் அவர்கள் தில்லியிலும் வங்கத்திலும் உள்ள காங்கிரஸ் கட்சியின் கைக்குள் இருப்பார் என்று தெரிகிறது. அவர் பதவியில் இருக்க வேண்டுமாயின் காங்கிரஸைச் சார்ந்தே இருக்க வேண்டியதாகும். பல காரணங்களுக்காக இது எனக்குப் பிடிக்கவில்லை.

இக்கருத்துக்களையே மீண்டும் கூற வேண்டியதாகிறது.

டாக்டர் கோஷை முதன் மந்திரியாக ஒப்புக்கொள்ள முடியாது என்று வங்கச் சட்ட சபை நாயகர் கூறியது தவறு என்று சட்ட நிபுணர்கள் கருதுகிறார்கள். இதுவே சரியான கருத்து என எடுத்துக் கொள்ள வேண்டும்.

அதெப்படியாயினும் டாக்டர் கோஷை ஒரு துன்பம் நிறைந்த வியர்த்தமான ஸ்தானத்தில் வைத்ததாகவே ஆகிறது. ஒழுங்கு நிலை உண்டாகிற வரையில் வங்கத்தில் ராஷ்டிரபதி ஆட்சியை ஏற்படுத்துவதே நேரான முறை. கம்யூனிஸ்ட் கட்சியின் மீது தில்லி தீவிரமான நடவடிக்கை எடுத்தாலே ஒழுங்கு நிலை உண்டாகும் எனக் கருதுகிறேன். அத்தகைய தீவிர நடவடிக்கை எடுப்பதற்குரிய பாத்திரமாகவேதான் கம்யூனிஸ்ட் கட்சி நடந்து கொண்டிருக்கிறது.

# ஐக்கியம் நீடிக்கட்டும்!

இவ்வாண்டு சென்னை மேயர், உதவி மேயர் தேர்தலில் ஒரு குறிப்பிடத்தக்க அம்சம், மாநகராட்சி மன்ற உறுப்பினர் அனைவரும் ஏகோபித்த முடிவுக்கு வந்தது தான். இதுபோன்ற தேர்தல்களில் எத்தனையோ காரசாரமான வாய்ச் சண்டைகளும், அது முற்றிக் கலாட்டாக்களும் கூட ஏற்பட்டிருப்பதை நாட்டின் பல இடங்களில் கண்டிருக்கிறோம். அப்படியெல்லாம் எதுவுமின்றி சுமுகமான சூழ்நிலையில் எல்லாக் கட்சிகளும் ஏகோபித்துத் தேர்வுசெய்ததைப் பாராட்டவே வேண்டு மல்லவா?

ஸ்தல ஸ்தாபனங்களில் அரசியல் கட்சி முறையே வேண்டியதில்லை என்ற அறிவாளிகளின் கருத்து — தி. மு. க. அரசின் கருத்து — இதனால் வலுப்பெற்றிருக்கிறது. நகரின் நலனைப் பேணுவதில் கட்சி, பிரதி கட்சிகளுக்கு அவசியமில்லைதான். மேயர் தேர்தலில் காணப்பட்ட இதே மனோபாவம், தொடர்ந்து எல்லாக் கட்டங்களிலும் செயலுருப் பெற்றால் சென்னை நகரம் வெளித்தோற்றத்தில் சிறப்புறப் பெறுவதோடு, ஐக்கியம் என்ற அக அழகும் மக்களிடை ஏற்படக்கூடும். தமிழ்நாடு முஸ்லீம்லீகின் உபதலைவரும், சட்டசபையாளரும், முன்னாள் உதவி மேயருமான, டாக்டருமான மேயர் ஹபிபுல்லா பேக் அவர்கள் நகர வாழ்வைச் செம்மை செய்வதற்குத் தம்மால் இயன்ற அனைத்தும் செய்வதாக உறுதி கூறியிருக்கிறார். உதவி மேயராகியுள்ள இளைஞர் திரு பவனவண்ணன் அவர்கள் சென்னைக்குக் குடிநீர்விநியோகம், கழிவுகால் விஸ்தரிப்பு இவற்றுக்குப் பாடுபடுவதாகப் பிரதிக்ஞை செய்திருக்கிறார். இந்த நல்ல திட்டங்கள் நிறைவேறிச் சென்னை மக்களின் வாழ்த்துக்களை இன்றைய மேயரும் உதவி மேயரும் என்றும் பெறுவார்களாக!





# சீரிளமை வாய்ந்த மூதறிஞர்

இருபதாம் நூற்றாண்டு அரசியல் வரலாற்றில் தனி முக்கியத்துவம் வாய்ந்த மூதறிஞராக இராஜாஜி விளங்குகிறார். நுண்ணறிவு, மதி நுட்பம், வருங்கால நடப்பை யூகிக்கக் கூடிய தொலைநோக்கு, அறிவாற்றல், மனத்திண்மை ஆகியன அவருக்குரிய சிறந்த தலைமைப் பண்புகள். வயது முதிர்ந்தும், இப்பண்புகள் சீரிளமை பெற்று விளங்குவது அவருக்கே அமைந்த தனி வாய்ப்பு.

இந்த நாட்டுக்கு உரிய பழைய மரபில் ஊறி வளர்ந்தவர் ராஜாஜி. விடுதலைப் போரின் முக்கிய தளபதிகளில் ஒருவராக விளங்கியவர். எவ்வளவோ தொல்லைகளை ஏற்றவர். சொந்த வாழ்க்கையிலும் பொது வாழ்விலும் பல சோதனைகளைக் கடந்தவர். பெரிய பதவிகள் வகித்தவர். தமது ஆற்றலின் வாயிலாக அந்தப் பதவிகளுக்குப் பெருமை சேர்த்தவர். இவ்வளவையும் கடந்த பின்னர், இன்றும் அவர் நாட்டுக்கான, மக்கள் நன்மைக்கான பணிகளில் முன்னணியில் நிற்கிறார். பழமை மரபும் அநுபவமும் அவருக்கு வேர். பழமை வேரிலிருந்து கிளைக்கும் செடியின் புது மலர்களாக அவருடைய கருத்துக்கள் விளங்குகின்றன.

காங்கிரசை வளர்த்தவர் இராஜாஜி. ஆனால் 'காங்கிரஸ் அமைப்பு உளுத்துப் போய் விட்டது; காங்கிரஸ் ஆட்சியினால் மக்களுக்கு இனி நன்மை இல்லை' என்று உணர்ந்தபின்னர் இராஜாஜியால் வாளாவிருக்க முடியவில்லை. தமது பழைய பந்த பாசங்களை யெல்லாம் ஒதுக்கி வைத்தார். ''செத்துப் போன பிணம்; அதை அடக்கி அடக்கம் செய்ய வேண்டியதுதான் மகன் செய்ய வேண்டிய முதல் கடமை'' என்று கூறிக் கிளம்பினார்.

முன்பு சொன்ன கொள்கையிலிருந்தும், முன்பு வகித்த நிலையிலிருந்தும் காலப் போக்குக்கு ஏற்ற மாறுதல்களைத் துணிவோடு செய்து கொள்ளும் இயல்புள்ளவர். காலப் போக்குக்கு ஏற்றவாறு அவரது கொள்கையும் பணியும் அமைகின்றன. மக்களுக்கு நன்மையானதா என்ற நடைமுறைப் பொருத்தத்தைத்தான் அவர் கவனிப்பார்.

விடுதலைப் போரின் ஒரு கட்டத்தில் காந்தியடிகளையும் எதிர்த்தார் இராஜாஜி. காந்தியடிகளை எதிர்த்து எந்தத் தலைவரும் அரசியல் வானில் ஒளிவீச முடியாமல், மங்கி மறைந்து போவதுதான் அன்றைய நிலைமை. ஆனால் இராஜாஜி மட்டும், காந்தியடிகளை எதிர்த்தும் தாக்குப் பிடித்து நின்றார். எத்தனையோ எதிர்ப்புக்களிடையிலும் தமது கருத்துக்களைத் துணிந்து வெளியிட்டார். சிக்கல்களைத் தெளிவுபடுத்தி, உரிய தீர்வுகளை வகுத்துக் காட்டுவது இவருக்குக் கைவந்த கலை.

தென்னகத்தில் தாழ்த்தப்பட்டு, ஒதுக்கப்பட்டு, வாய்ப்புக்கள் மறுக்கப்பட்டு, பின்னணியில் தள்ளப்பட்டுக் கிடந்த மக்களுக்கு ஒரே நம்பிக்கைச் சின்னமாகத் திராவிட முன்னேற்றக் கழகம் அறிஞர் அண்ணா தலைமையில் வளரத் தொடங்கிய போது பலரும் அதை எதிர்த்தார்கள். ஆனால் தி.மு.க.வின் வளர்ச்சியை இனி எந்தச் சக்தியாலும் அடக்க முடியாது என்ற நிலை வந்தது. எதிர்க்கட்சிகள் தொகுதி உடன்பாடு கண்டன. இந்தக் கூட்டு முயற்சி வெற்றிகரமாகச் செயல்படுவதில் அண்ணா அவர்களுக்கு உறுதுணையாக இருந்தவர்கள் இராஜாஜியும், காயிதே மில்லத்தும் மற்ற எதிர்க்கட்சித் தலைவர்களுமாவர். தமிழகத்தில் மாற்றுக் கட்சி ஆட்சி ஏற்பட வேண்டும், ஏற்பட்டே தீரும் என்று முதல் முழக்கம் செய்தார் இராஜாஜி. தி.மு.க.தான் அமைச்சரவையை அமைக்க வேண்டும் என்று தேர்தலுக்கு முன்பே கூறினார். தி.மு.க.வின் வலிமையையும், வருங்காலப் போக்கையும் உய்த்துணர்ந்து, கூட்டணியின் வலிமை வளர்வதற்குப் பேருதவியாக இருந்தார்.

தி. மு. க. அமைச்சரவை ஏற்பட்டதோடு, தமிழகத்தில் வகுப்பு மாச்சரியப் பூசல் அறவே ஒழிந்துவிடும் என்று இராஜாஜி கூறினார். கட்சிகளின் கூட்டு முயற்சி மூலம் நன்மைகள் காண்பதிலும், மக்கள் மனக் கசப்பு நீங்கி இணைந்து வாழும் பாங்கிலும் தமிழகம் இன்று இந்தியாவுக்கே எடுத்துக்காட்டான மாநிலமாக விளங்குகிறது. மக்களின் இதய ஒற்றுமை நல்ல முறையில் வலுப்பெற்று வருகின்றது.

தம்மைப் பின்பற்றுவோரின் எண்ணிக்கை பலம் குறித்து இராஜாஜி கவலைப்படுவதில்லை. தமது கருத்துக்களை எல்லாத் தரப்பு மக்கள் மனத்திலும் பதிய வைக்கும் திறன்தான் அவருடைய தனிச் சக்தி. உலகத்துப் பேரறிஞர்களிலிருந்து மிகச் சாமானிய மக்கள் வரை, எல்லாத் தரப்பு மக்களையும் கவரும் அவருடைய அறிவாற்றலின் மூலம், நாடும் மக்களும், நல்லவர் அனைவரும் பயனடைகிறார்கள். நாடு நலமுற, இராஜாஜி இன்னும் பல்லாண்டு வாழ்வாராக!

**அமைச்சர் மு. கருணாநிதி**

# மகாபாரதம்

சோழர் காலத்துச் செப்பேடுகளில் எழுத்து மிகவும் நன்றாக இருக்கிறது. வரிகளும் வடிவும் நிரம்ப நன்றாக இருக்கின்றன. சோழர் காலத்துக்கு இருநூறு முந்நூறு வருஷங்கள் முந்திய பல்லவ காலத்துச் செப்பேடுகள் அவற்றைவிட நன்றாக இருக்கின்றன. கண்ணில் ஒத்திக் கொள்ளலாம் போல் இருக்கிறது. ஆனால் சமீபத்தில் இருநூறு முந்நூறு வருஷங்களுக்கு முந்திய செப்பேடுகளைப் பார்த்தாலோ ஒரு சீரும் இல்லை; முறையும் இல்லை; தப்பும் அதிகமாக இருக்கிறது.

விக்கிரகங்களைப் பார்த்தேன். பல்லவ விக்கிரகங்கள் நிரம்ப நன்றாக இருக்கின்றன. சோழ விக்கிரகங்கள் ஒரு மாதிரி நியதியிலே நன்றாக இருக்கின்றன. இப்போது யாரிடமாவது புதிதாக ஒரு விக்கிரகம் அடிக்கக் கொடுத்தால் எப்படி இருக்கிறது? அழகோ, சாந்நித்தியமோ, தெய்வக் களையோ பழையவற்றில் இருப்பதுபோல் புதிதில் இருப்பதில்லை.

பழைய காலத்து ஜனங்களுடைய குணம் எப்படி ? அதுவும் அதே மாதிரி உயர்ந்துதான் இருந்ததாகத் தெரிகிறது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் இந்நாட்டுக்கு வந்த மெகஸ்தனிஸ், 'இந்தியாவில் யாராவது ஏதாவது கொடுத்தாலும்கூடக் கைநீட்டி வாங்கிக் கொள்பவர் இல்லை. எந்தப் பண்டம் எங்கு கிடந்தாலும் அந்த நாட்டவருக்குத் திருடத் தெரியாது. பொய் சொல்லவே தெரியாது' என்றெல்லாம் சொல்கிறான்.

சாந்தமும், நல்ல குணமும், தப்பு வழியே இல்லாமல் சரியானபடி போகும் போக்கும் அந்தக் காலத்தில் இருந்தன. இப்போது அந்த நிலை மாறிவிட்டது. அந்தக் காலத்தில் ஜனங்கள் எப்படி இருந்தார்கள்? அவர்களுடைய மனசு எப்படி இருந்தது ? அந்த மாதிரியே இப்போதும் இருக்கக் கூடாதா என்று தோன்றுகிறது.

அந்தக் காலத்தில் நல்ல நிலைமையில் இருந்து இப்போது அதே வமிசத்தில் தோன்றிய ஜனங்களின் நிலை மிகவும் தாழ்வாகப் போவதற்கு ஏதாவது காரணம் இருக்க வேண்டுமென்று யோசித்தேன்.

அந்தக் காலத்தில் கோயில்களிலெல்லாம் பாரதம் வாசிக்க வேண்டும் என்று கட்டளை இருந்திருக்கிறது. பாரதம் வாசிப்பதற்கென்றே மானியம் தருகிற சாஸனங்கள் இருக்கின்றன. இப்போது பெரிய கோயில்களில் பாரதம் வாசிக்கிறதைக் காணோம். கிராமாந்தரங்களில் கிராம தேவதைகளின் கோயில்களில் மட்டும் எங்கோ பாரதம் வாசிக்கிறதைப் பார்க்கிறோம். கிராம ரக்ஷைக்காக உள்ள அந்த ஒருசில கோயில்களுக்கு இன்றும் கிராம மக்கள் போகிறார்கள். ஸினிமா வந்து இவ்வளவு ஜனங்களை ஆகர்ஷிக்கிறபோதுகூட பாரதம் கேட்க ஜனங்கள் இருக்கிறார்கள் என்றால் பழைய காலத்தில் எப்படி இருந்திருக்கும்? அப்போது ஜனங்களுக்கு வேறே வழியே இல்லையே !

அந்த பாரதத்தில் என்ன இருக்கிறது? பொறுமை என்பதற்கு வடிவமாக தர்மபுத்திரர் இருக்கிறார். சத்தியமான பிரக்ஞை என்பதற்குப் பீஷ்மர் இருக்கிறார். தானத்துக்குக் கர்ணன். கண்ணியத்துக்கு அர்ஜுனன். இப்படியே ராமாயணத்தை எடுத்துக் கொண்டால் பெண்களுடைய உத்தமமான தர்மத்துக்கு உதாரணமாக சீதை இருக்கிறாள். ராமனுக்கு நேர் விரோதியான ராவணனுக்கு மனைவியாக இருக்கும் மண்டோதரியும் சீதைக்குக் குறைவில்லாத மகா பதிவிரதையாக இருக்கிறாள்.

ராமாயண பாரதக் கதைகளைக் கேட்கும் போது இப்படிப்பட்ட உத்தமமான ஆத்மாக்களின் ஞாபகம் வருகிறது. படித்தவர், படிக்காதவர் எல்லாருக்கும் அடிக்கடி அந்தக் கதைகள் காதில் விழுந்து கொண்டிருந்தால், நம்மால் அந்த உத்தம பாத்திரங்களைப் போலவே நடக்க முடியாமற் போனாலும் இதுதான் உண்மையான நிலை என்ற நினைவு வரும். இதனால்தான் இந்தக் கதைகளை மக்கள் நிரம்பக் கேட்டு வந்த அந்தக் காலங்களில் உயர்ந்த தர்மமும், உயர்ந்த நீதியும் இருந்தன. தர்மம் நீதி இரண்டும் சேர்ந்துதான் பண்பு உண்டாகிறது. அந்தப் பண்பாட்டை மாற்றுவதற்கும் குலைப்பதற்கும் இப்போது எத்தனையோ ஏற்பாடுகள் வந்திருக்கின்றன. முன்பு இருந்த பழக்கத்தை மறுபடியும் உண்டாக்குவது கொஞ்சம் கஷ்டம்தான். ஆனாலும் சிறிதாவது செய்யத்தான் வேண்டும். நாம் நல்லது பண்ணிக் கொண்டு போனால் ஈசுவரன் நமக்குக் கைகொடுப்பார். அவர் நமக்குக் கைகொடுத்திருக்கிறார்; கால் கொடுத்திருக்கிறார்; கண் கொடுத்திருக்கிறார்; கொஞ்சம் ஆலோசிப்பதற்குப் புத்தியும் கொடுத்திருக்கிறார். இந்தச் சக்தியும் புத்தியும் இருப்பதற்குள்ளே ஏதாவது சத்காரியம் செய்ய வேண்டும்.

இப்போது என்ன என்னவோ விதமான ஆபத்துக்கள் நமக்கு வந்து கொண்டிருக்கின்றன. ஜனங்கள் இன்ன வழியில் போவது என்று தெரியாமல் சிரமப்பட்டுக் கொண்டிருக்கும்போது அநேக கட்சிகள் வந்து ஜனங்களுடைய புத்தியைப் பலவிதமாக மாற்றிக் கொண்டிருக்கின்றன. இந்த நிலையில் நம்முடைய சத்தியமும் நீதியும் தர்மமும் ஜனங்களுடைய மனசில் கலையாமல் நின்று காப்பாற்ற வேண்டும். அப்படிக் காப்பாற்றுவதற்கு மகாபாரதமே உபகாரமாக இருக்கும் என்று அன்றிலிருந்து இன்று வரை ஜனங்களுடைய அநுபவத்தினாலே தெரிகிறது.



# மகாபாரதம்

## ராஜாஜி



# கல்கி

பொங்கல் மலரில் தொடங்குகிறது!





உடுப்பி ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் வழிபாட்டுப் பொறுப்பை அடுத்த இரண்டாண்டுகளுக்குப் பெறும் பேஜாவர் மடாதிபதி ஸ்ரீ விச்வேச்வர தீர்த்த ஸ்ரீ பாதங்களவரு ஸ்வாமிகளின் சென்னை விஜயம் சிறப்புற நிகழ்ந்தது. தெய்வ பக்தி பரவ வேண்டிய தன் அவசியத்தையும், சம்ஸ்கிருதக் கல்வி வளர வேண்டியதன் அவசியத்தையும் ஸ்வாமிகள் பல இடங்களில் தெளிவுற விளக்கியருளினார்கள். தோற்றத்தாலும், ஒழுக்கத்தாலும், உரையாலும் சென்னை மக்களைப் பக்தியில் கவர்ந்த ஸ்வாமிகளுக்கு நவம்பர் 24ந் தேதி தர்ம பிரகாஷில் சிறந்த முறையில் வரவேற்பளிக்கப்பட்டது. ஸ்வாமிகளின் பட்டணப் பிரவேசத்தையும், வரவேற்புக் குழுத் தலைவர் ஸ்ரீ டி. எல். வெங்கடராமய்யர், செயற்குழுத் தலைவர் ஸ்ரீ சீதாராம ராவ் ஆகியோரையும் மேலே காண்கிறீர்கள். ராஜா ஸர் முத்தையா செட்டியார் அவர்கள் சென்னை மக்கள் சார்பில் ஸ்வாமிகளுக்குக் காணிக்கை செலுத்தியதைக் கீழேயுள்ள படத்தில் காணலாம்.

# சூரிய பகவானிடமிருந்து சக்தி பெறுவோம்

**- ராஜாஜி -**

நான் இளைஞனாக இருக்கக் கூடாதா, அரசியல் குழப்பத்தில் அகப்பட்டுக் கொள்ளாமல் பௌதிக ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கக் கூடாதா என்று அடிக்கடி எண்ணுகிறேன். கல்லூரியில் பௌதிக பாடத்தை விட்டு நான் சட்டம் படிக்கத் தொடங்கியது பரிதாபம்! சட்டத் தொழிலை விட்டு அரசியலில் புகுந்ததும் துரதிர்ஷ்டம் என்றே தோன்றுகிறது. அரசியலில் அலுத்துப் போன என் மனம் தெய்வத்தை நோக்கித் திரும்புகிறது.

பௌதிக சாஸ்திரத்தில் சூரியன் மகா கொதி நிலையிலுள்ள வாயுக்கள் நிரம்பிய ஒரு கோளம். வாயுக்கள் சிதறிப் பரவுவதே அவற்றின் இயற்கை. மூடிய ஒரு பாத்திரத்தில்தான் வாயுவைப் பரவாமல் இருத்தி வைக்க முடியும். ஆனால் சூரியனிலோ வாயுக்கள் ஒன்று திரண்டிருப்பது நம் பாக்கியம். அதிஉஷ்ணமான இந்த வாயுக் கோளம் நமக்கு உணவும் உயிரும் தருவதற்காகத்



தினமும் உதயமாகிறது. பௌதிகத்தின் ஆராய்ச்சிப் பொருளான இதே சூரியன், வேத சாஸ்திரங்களிலும் முக்கியமான இடம் கொள்கிறான். தியாகத்துக்கும் சேவைக்கும் உருவமான பூணூல் தரிக்கும்போது ஒவ்வொருவனும் உபதேசம் பெறும் காயத்திரி மந்திரத்தின் விஷயம் சூரிய பகவான். 'தியானத்துக்குரிய சூரிய பகவானுடைய ஒளி என் உள்ளத்தில் புகுந்து என் சிந்தனைகளைத் தூண்டி விடுவதாகுக' என்பதே காயத்ரி ஜபத்தில் அடங்கிய பிரார்த்தனை. தியானம் செய்து துதிப்பதற்காக இப் பிரார்த்தனையை நமது முன்னோர்களுக்கு விசுவாமித்திர மகரிஷி வழங்கினார்.

உயிரற்ற கொதி வாயுக் கோளமே சூரியன் என்பது தற்கால பௌதிகம் சொல்கிற பாடம். ஆனால் தியான அனுபவம் வாய்ந்த நமது முன்னோர்களோ சூரிய ஜோதிக்குப் பின் ஒரு தெய்வம் இருப்பதாக உறுதியாகக் கருதினர். நம்முடைய உலகத்தை சிருஷ்டித்து உயிர்களை ஜீவனுடன் இயக்கி வரும் சூரியன், காட்சிக்கு எட்டாத பரம்பொருள் நம் கண்ணுக்குத் தெரியும் வண்ணம் கொண்ட பிரத்தியட்ச வடிவம் என்றார்கள். சூரியன் என்பது நம் கண்ணுக்குக் கோசரமாகும் பிரம்மம். எந்த அரசியல்வாதியாயினும் சரி, மாணக்கனாயினும் சரி, அவர்கள் வேறெந்தச் செயல்களில் ஈடுபட்டிருந்தாலும் தினந்தோறும் காலையும் மாலையும் சூரியன் நமக்குத் தரும் சாந்தமான காட்சியை அனுபவித்துத் தனக்குள்ளேயே மௌனமாக விசுவாமித்திரர் தந்த மகா மந்திரத்தை மனனம் செய்வதால் பகுத்தறிவை இழந்துவிட மாட்டார்கள். மந்திரத்தின் உட்பொருளில் ஆழ்ந்து ஜபிக்க வேண்டும். சூரியன் ஒரு தேவன்; முனிவர்கள் எ_தப் பரம்பொருளின் உட்கலப்பதற்காகத் தவமிருந்தனரோ அந்தப் பரம்பொருளின் பிரதிநிதியே சூரியன் என்பது நம் முன்னோர் துணிபு. கொடிய விலங்குகள்போல் நம்மை விழுங்கக் காத்திருக்கும் பாபங்களிலின்று காயத்ரி பிரார்த்தனை நம்மைக் காப்பாற்றும். இந்த உலகமும், உயிர் வாழ்க்கை அனைத்தும் சூரியனைச் சார்ந்தவையே. சூரியனில் உள்ள ஆண்டவன் நம் மனத்தில் பிரவேசித்து நம்மைத் தீமையிலிருந்து காப்பானாக!

## நோயாளியும் திருடனும்

இடைக்காலத்தில் அரசியலிலிருந்து விலகியிருந்த ராஜாஜி மீண்டும் அரசியலுக்கு வந்தபோது ஜஸ்டிஸ் கட்சிக்காரர்கள், ''இவர் எப்படி அரசியலுக்கு வரலாம்?'' என்று ஆட்சேபித்தனர். அதற்கு ராஜாஜி தந்த விடை:

''நோயாளி படுத்த படுக்கையாக இருந்தான். அவன் எழுந்திருக்கக் கூடாது என்று டாக்டர் சொல்லி யிருந்தார். இந்த விஷயத்தை அறிந்துகொண்டு ஒரு திருடன் அவர் வீட்டில் புகுந்தான். நோயாளி திருடனைக் கண்டதும் தம்முடைய வியாதியை மறந்து படுக்கையை விட்டு எழுந்துபோய்த் தடியை எடுத்துக்கொண்டு கிளம்பினார். அதைப் பார்த்துத் திருடன், 'இது என்ன அநியாயம்? படுக்கையை விட்டு எழுந்திருக்கக் கூடாது என்று டாக்டர் சொல்லியிருக்கிறாரே! அதை நீ எப்படி மீறலாம்?' என்று கேட்கலாமா?

''தேக நிலை சரியில்லை என்று படுக்கையில் படுத்துக் கொண்டிருக்கிறேன். எவ்வளவு பலவீனமாக இருந்தாலும் வீட்டில் திருடன் புகுந்தால் எழுந்து போய்த் தடியை எடுத்து வந்து ஓர் அடி போட வருகிறேன். இதைத் திருடன் ஆட்சேபிக்கக் கூடாதல்லவா?''

# படியப்படிய வாரிய கேசம், பளபளப்பான கேசம் !

## டாடா *நறுமண* கேஸ்டர் ஹேர் ஆயில் !

*நாள்முழுதும் கேசம் கலையாமலிருக்கச் செய்கிறது*

கேசப் பராமரிப்பு ஓர் அரிய கலை. அழகாய் அமைந்த கேசம் அலாதி தன்னம்பிக்கையை அளிக்கிறது. நாள் முழுதும் கலையாமல் இன் மணத்துடனும் ஆரோக்கியமுடனும் உங்கள் கேசம் மிளிர டாடா நறுமண கேஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்... எழில்மிகு தோற்றம் பெற

*டாடா கேஸ்டர் ஹேர் ஆயில்...*

கண்கவரும்
புதிய புட்டி
3 சைஸ்களிலே
கிடைக்கிறது




ஆரோக்கியமான படிந்த கேசத்துக்காக.

# சித்தத்தைப் பொன்னாக்கும்



தேங்கா பழம் சூடம் ஏற்றி வைத்து — நம்ப
செந்தமிழ்த் தாயினைக் கும்பிடடி.
தெய்வம் இருக்குது என்று நம்பும் — ஒரு
தேசத் தலைவரைத் தந்ததற்கே.
மானாபிமானத்தை விட்டவரு — அவர்
தானா மகந்தையைச் சுட்டவரு.
பேனாவில் நன்மையைத் தொட்டவரு — தேசிய
பிசினசுக் காரர்க்குக் கெட்டவரு.
முக்காலமும் காட்டும் கண்ணாடியை — அவர்
மூக்குக் கண்ணாடியாய்ப் போட்டவரு.
எக்காலமும் உள்ள தருமத்தையே — அவர்
கைக் கோலாய் ஊணி நடப்பவரு.
காக்கும் கடமையைச் செய்வதற்கே—கண்ணன்
காட்டிய பாதையில் நடப்பவரு.
ஆக்கினா சக்கரம் தோற்குமடி — அவர்
வாக்கு வலிமைக்கு முன்னாலே.
இத்தனை சின்னாண்டு வடிவத்திலே — அந்த
ஏழ்கடல், வானகம், வையகமும்
வைத்தவன் சக்தியை நாமறிய — பூவில்
வந்த திரு அவ தாரமடி.
தேசாபிமானமும் காசாசையும் — நேரே
தெற்கும் வடக்கும் போலாகுமென்று
கூசாமல் சொல்லத் துணிந்தவரு — அந்தக்
கொள்கைப் படிக்கே நடப்பவரு.
ஏசின பேருக்கும் இன்பம் வரும் — தெய்வம்
இல்லை யென்பாருக்கும் ஏற்ற முண்டு
பேசிடும் பேச்சுக்கு மதிப்பு உண்டு — என்ற
பெருமைக்கு ஒருதலை ராஜாஜி.
கூசுது கூசுது கண்கள் என்றால் — அந்தக்
கோளாறு ஆதவன் குறைபாடா?
பேசுற பேச்சைப் புரிந்து கொள்ள — சற்றும்
பிடிக்காத பேர்களின் பிடிவாதம்.
பித்தவாத நாடி மூன்றுக்குள்ளே — எந்தப்
பெரிய தேகமும் தெரியு மென்று
நாடியைப் பார்த்தே மருந்து கொடுக்கிற
நாட்டு வைத்தியர் ராஜாஜி.
கென்னடி பாராட்டிய மேதாவி — அவர்
கீர்த்தி மயங்காத வேதாந்தி.
அன்னியச் சீமையில் இன்னிக்கும் தமிழரின்
அறிவைப் பற்றிப் பேசும் ஓர் ஆளு.
வள்ளுவர் வாசகம் சொல்லி விட்டுச் — சும்மா
வரப்பைத் தாண்டியே ஓடாமல்
வள்ளுவர் சொன்ன வழியில் நடக்குற
வல்லமை உள்ளவர் ராஜாஜி.
அணுகுண்டு தன்னை எதிர்க்கிறவர் — இங்கே
யாருக்குத் தானஞ்சப் போறாரு?
கணுக் காலளவு கடலாழம் — அவரைக்
கட்டிப் பிடிக்கிற பேர்யாரு?



# சித்தர்

## கொத்தமங்கலம் சுப்பு




அக்கு ரமத்தை எதிர்க்கிறதில் — அவர்
வக்காலத் தில்லாத வக்கீலு.
ஆட்சித் துரைத்தனம் செய்பவர்க்கு — அவர்
ஆசிரியர் டிரெயினிங் ஸ்கூலு.
ஏறுக்கு மாறாக நடப்பவரை — அவர்
இன்னார் இனியா ரென் றெண்ணாமல்
நேருக்கு நேராகப் போராடி — தருமம்
நிலை நாட்டும் வீரனே ராஜாஜி.
வாரிதிநீர் வத்திப் போனாலும் — அந்த
வானம் வழங்க மறுத்தாலும்
சூரியன் திசை தப்பிப் போனாலும் — அவர்
சொன்னது தப்பாத சோசியரு.
வருத்தத்தின் காரணம் கண்டிரோலு — பர்மிட்
வச்சதனாலென்று சொல்லிச் சொல்லித்
திருத்தத்துடனே நாம் அறியுமட்டும் — போடும்
டிக்டேஷன் டீச்சரு ராஜாஜி.
ஈட்டி மழுங்கும் எழுத்து முன்னே — அவர்
ஏற்ற பதவிகள் ஏற்றம் பெரும்
கோட்டைக் கிழிச்சாலே கோட்டைவிழும்—அவர்
கோதண்ட பாணியின் பூசாரி.
கண்முன் சனகரைக் காணுகிறோம் — அந்தக்
கதைபாடும் கவியையும் காணுகிறோம்.
கண்டிப்புக் கண்வரைக் காணுகிறோம்—துர்வாச
கடுங்கோபக் கண்ணையும் காணுகிறோம்.
வேத வியாசரைக் காணுகிறோம் — அந்த
விஜய காண்டீபனைக் காணுகிறோம்
பாதகம் செய்வாரை மோதி மிதித்திடும்
பாரத ரத்தினப் பட்டையிலே.
புண்ணியம் செய்து பிறப்பெடுத்தோம் — அவர்
புத்திமதிக்குக் கொடுத்து வைத்தோம்.
கண்ணன் காட்டிய வழியைக் காட்டிய
கலியுக வியாசரைக் கும்பிடுவோம்.
சிலையைப் பெண்ணாக்கிய திருவடியை — நாம்
சேவிக்கத் தமிழிலே தந்தவரை
சித்தத்தைப் பொன்னாக்கும் உத்தமரை—அந்தச்
சேலத்துச் சித்தரைக் கும்பிடுவோம்.
கண்டதும் கேட்டதும் இல்லையடி — நம்ப
கற்பனைக் கெட்டாப் பிறவியடி.
மொண்டு குடிக்கிற சொம்பைக் கொண்டு—அலை
மோதும் கடலை அளப்பதுண்டோ?
அறிவுக் கடலைப் படைத்து விட்டு — இந்த
அண்டத்தைப் பிண்டத்தில் காட்டுவிக்கும்
ஆதி பரம் பொருள் அருளாலே — இன்னும்
ஆயிரம் ராஜாஜி தோன்ற வேண்டும்.

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!

ஒருவேளையில் ஒரே தேய்ப்பில் கால்கேட் கிரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினுல் பற்களைத் துலக்கும் முறையால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

கால்கேட்டின் நீடித்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனுலேயே பல் துலக்க விரும்புகிருர்கள்!

நீங்கள் பற்பொடியை விரும்பினுல் இத்தப்பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவடர் மூலம் அடையலாம்.
ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




[illegible], வாயில் நறுமணம்கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினுல் பல்துலக்குங்கள்




...உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டென்டல் கிரீமையே வாங்குகிருர்கள்.

# இலட்சிய மனிதர்

ஸ்ரீ பிரகாசா

ராஜாஜியைப் பற்றி எழுத சந்தர்ப்பம் கிடைத்ததே; அதுவே ஒருபாக்கியம். பழைய காவலர்களில், சக ஊழியர்களில், நண்பர்களில் பலர் மறைந்த போதிலும் நானுவது ராஜாஜியை வாழ்த்த இருக்கிறேன் என்பதை ஒரு பாக்கியமாகவே கருதுகிறேன். நமது தேசத்துக்கும் பாக்கியம்தான் அவர் நம்மிடை இருப்பது. எல்லாம் தவறான திசையில் செல்வதாகத் தோன்றும் இன்றைய நெருக்கடி நிலைமையில் அவர் முதிர்ந்த வயதிலும் ஜீவத் துடிப்புடனும் உற்சாகத்துடனும் இருந்து, நமது சக்தியின் ஒவ்வொரு துளியையும், நமது நேரத்தின் ஒவ்வொரு கணத்தையும் நாட்டு மக்கள், அவர்களது ஆட்சியாளர் ஆகியோருக்குத் தகுந்த தலைமை தருவதிலேயே செலவழிப்பது நமது பாக்கியம்.

ஐம்பதாண்டுகளுக்குமுன் சுதந்திர இயக்கம் என்கிற சாகஸச் செயலைத் தொடங்கிய போது மகாத்மா காந்தியுடன் கைகோத்துக் கொண்ட வீரதீரப் படையில் இன்று தனியொருவராக இருப்பவர் ராஜாஜி. அந்தப் பழைய இலட்சியங்களை நமக்கு நினைவூட்டுவதற்காக ராஜாஜி ஒருவரேனும் இன்று வாழ்வது அதிருஷ்டம். நாம் எங்கே திசை தவறுகிறோம் என்று காட்டவும், அதன் மூலம் நாம் சரியான மார்க்கத்துக்குத் திருப்பி இழுக்கப்படவும் ராஜாஜி உதவுகிறார். சுயராஜ்யம் வந்தவுடன் அதோடுகூட விசித்திரமாக வந்துள்ள தனிப்பட்ட சமூக, அரசியல் நிலவரங்களின் சிக்கல்கள் நம் மீது படையெடுத்து நாட்டு வாழ்வில் பல தீமைகள் புரையோடிவிட்ட இந்தச் சமயத்தில் இப்போக்கை எப்படித் தடுத்து நிறுத்துவது என்பதற்குத் தலைசிறந்த உதவி புரிகிறார் ராஜாஜி.

ராஜாஜியுடன் நான் கொண்ட தோழமை, 1920 டிஸம்பரில் நடந்த கயா மகாநாட்டிலிருந்து தொடங்குகிறது. 'ராஜாஜியுடன் என் தோழமை' என்று பெரிய வார்த்தையைச் சொல்லும் போது அதைத் துடுக்குத்தனமாக எடுத்துக் கொள்ளக்கூடாது.

அப்போது மகாத்மா காந்தி சிறையில் இருந்தார். காந்திஜியின் காரியத் திட்டத்தை அப்போதும் மாற்றாமல் நீடிக்க வேண்டும் என்பதற்காக, இன்று மறைந்து விட்ட வேறு சில முன்னணி வீரர்களுடன் ராஜாஜி போராட்டம் செய்தார். காந்திஜியின் திட்டத்தை மாற்ற வேண்டும் என்று கருதிய தேசபந்து சித்தரஞ்சன தாஸ், பண்டித மோதிலால் நேரு, விட்டல்பாய் படேல் ஆகியோர் அறிவுத் திறனில் மகோன்னதமானவர்கள். அவர்களோடு ராஜாஜி போரிட்டார். பல்கு நதிக் கரையில் ஓய்வு ஒழிவின்றி நாட்கணக்கில் வாதப் பிரதிவாதங்கள் நிகழ்ந்தன. கடைசியில் ராஜாஜியே வென்றார். இது ஒரு மகத்தான வெற்றி. மக்கள் ராஜாஜியின் பின்தான் இருக்கின்றனர், தேச சுதந்திர இயக்கத்தின் வேறெந்தத் தலைவர்களின் பின்னும் அவர்கள் இல்லை என்று அனைவரும் அறிந்தனர்.

ராஜாஜியுடன் நானும் இருக்க நேர்ந்த அதிருஷ்ட சம்பவங்கள் பலவற்றை இன்று நான் நினைவுகூர முடியும். காசியில் எங்கள் வீட்டிலேயே விருந்தாளியாகத் தங்கி எங்கள் குடும்பத்தினரை அவர் கௌரவப்படுத்தியிருக்கிறார். ராஜாஜியின் பார்வையில் தவறே ஏற்படுவதில்லை. இன்னும், விஷயங்கள் எப்படி முற்றும் என்பதை அவர் வெகு வெகு முன்பாகவே காணக்கூடியவர் என்பதையும் என் பல்லாண்டுத் தொடர்பில் கண்டிருக்கிறேன். பாகிஸ்தான் ஏற்படத்தான் போகிறது என்பதை முதலிலேயே கண்டு, நம்மையும் எச்சரிக்கைப்படுத்தியவர் அவரே. அப்போது அவர் சொன்ன பாகிஸ்தான் திட்டத்தை எதிர்த்ததால் பிற்பாடு நிலைமை படுமோசமாயிற்று. அன்றே அவர் சொன்னபடி நாம் செய்திருந்தால் யாருக்கும் கஷ்டம் ஏற்படாத வகையில் ஒரு நியாய வரம்புக்குட்பட்ட நிலையில் பாகிஸ்தான் பிறந்திருக்கும். ஆனால் அவர் யோசனையை நாம் கேட்காததால், தீர்வு காண முடியாத பல சிக்கல்களைச் சிருஷ்டித்துள்ள வேறொரு பாகிஸ்தான் அமைப்பை ஏற்றுக் கொள்ள வேண்டியதாயிற்று. நண்பர்களாக நீடித்திருக்க வேண்டிய மக்களிடையே இந்தப் பாகிஸ்தான் பிரிவினையால் துவேஷமும் எதிர்ப்பு உணர்ச்சியும் ஏற்பட்டுள்ளன.

மிகவும் ஆதரிசமான அரசியல்வாதி ராஜாஜி. அவர் வெறும் அரசியல்வாதி மட்டுமல்ல; உயர்ந்த நன்னெறிக் கொள்கைகளையும் உடையவர். அந்த உத்தமமான நெறிகளை அநவரதமும் தம் வாழ்க்கையில் அநுஷ்டித்துக் காட்டுபவர். மனிதர்கள் நினைத்துப் பார்க்கக்கூடிய எல்லா விஷயங்களிலும் அபாரமான ஞானமுள்ளவர் அவர். நமது தேசத்தின் பல்வேறு கோணங்களையும் பூரணமாகக் கண்டவர் அவர். சலவைத் தொழிலாளி துணிகளை எப்படிச் சுத்தம் செய்கிறார் என்பதிலிருந்து ஒரு மகாராஜா தமது அரண்மனையில் எப்படி வாழ்கிறார் என்பது வரை அவருக்குச் சகலமும் தெரிவதைக் கண்டு நான் பிரமித்திருக்கிறேன். அவருக்கு அனைவரிடமும் அநுதாபம் உண்டு. அவருடைய யோசனையின் மீதுதான் நான் அடையாற்றங் கரையில் சலவையாளர்கள் ஓய்வெடுத்துக் கொள்ள ஒரு ஹால் கட்டினேன். இன்று அவர் பழைய சம்ஸ்தான அதிபதிகளுக்கு ராஜமானியம் நிறுத்தக் கூடாது என்று போரிடுவதையும் பார்க்கிறேன். விசாலமான தமது அநுதாபத்தின் வீச்சில் அவர் ஒவ்வொருவரையும், சகலரையும் தழுவுகிறார்.

தவறு செய்பவர்களிடம் அவர் தாட்சிண்யமே காட்ட மாட்டார். தூக்குத் தண்டனை விதிக்கப்பட்ட ஒருவனுக்கு அத்தண்டனையை ரத்து செய்யலாம் என்று கவர்னராக இருந்த போது நான் வாதிட்ட போதிலும் அவர் ஒப்புக் கொள்ளவில்லை என்பது நன்கு நினைவிருக்கிறது. அதே சமயத்தில் யாருக்குமே அநீதி இழைக்கப்படுவதற்கு அவர் அநுமதிக்க மாட்டார். உயர்ந்த ஸ்தானத்தில் இருப்பவர் மட்டும் இன்றி, எளியவர் விஷயத்திலும் எவ்வித அநீதியும் செய்யப்படுவதை அவர் பொறுக்க மாட்டார்.

சென்னை அரசாங்கத்தில் அவருடன் நான் வெகு நெருக்கமாகத் தொடர்பு கொண்டிருந்த இரண்டு மகிழ்ச்சி நிரம்பிய ஆண்டுகளை இன்று விசேஷமாக நினைவுகொள்கிறேன். மிகவும் சிரமமான ஒரு தருணத்தில் அவர் சென்னையின் முதன்மந்திரிப் பதவி என்கிற பளுவைத் தாங்க முன்வந்தார். அப்போது நான் ராஜ்யத்தின் தலைமை ஸ்தானமான கவர்னர் பதவியிலிருந்தது எனக்கே கூச்சமாக இருந்தது. முதன்மந்திரிப் பதவி ஏற்பதற்குமுன் அவரை நான் மேல் சட்டசபை அங்கத்தினராக நியமிப்பதற்கு அவர் என்னை அநுமதித்ததே என்வாழ்க்கையின் அதிமுக்கியமான, மறக்கவொண்ணாத சம்பவம் எனலாம். ஆகா, சென்னை ராஜ்யக் கப்பலுக்கு அவர் தலைமை மாலுமியாக இருந்த அந்த இரண்டு ஆண்டுகள் எவ்வளவு அற்புதமானவை! தம்மை எதிர்த்துச் சட்டசபையில் இரண்டிருந்த கம்யூனிஸ்ட்களை ஒரே வாக்கியத்தினால் வாயடைக்கச் செய்தார். ''நான் உங்கள் முதல் எதிரி; நீங்கள் என் முதல் எதிரி'' என்பதுதான் அந்த வாக்கியம். சிறுபான்மையாக இருந்த காங்கிரஸ் அவரது தலைமையில் விரைவிலேயே பெரும்பான்மையாயிற்று.

அவர் பதவி ஏற்பதற்கு முந்திய சூழ்நிலையை இப்போது நினைவுபடுத்திக் கொள்வது நலம். 1952 பொதுத் தேர்தலில் ராஜ்ய மந்திரிகள் பலரும் தோல்வி அடைந்திருந்தனர். புதிய அரசாங்கம் அமைக்கப்படும்வரையில் அந்த மந்திரி சபையே நீடிக்கப்பட்டிருந்தது. இந்தக் கட்டத்தில்தான் நான் சென்னை சென்றடைந்தேன். ஸெக்ரிடேரியட்டுக்கு நான் சென்ற போது மந்திரிகள் யாவரும் மனமுடைந்து, தங்கள் வேலையில் எவ்வித அக்கறையும் காட்டாதிருப்பதைக் கண்டேன். அரசாங்கக் காரியதரிசிகளும் தங்கள் பேனாக்களை மூடி வைத்து விட்டனர் என்றே சொல்லலாம். தங்கள் அன்புக்குரிய மாநிலத்தின் விதியை நினைத்து வருந்தி, எல்லாமே நாசமாகி விட்டது என்ற உணர்ச்சியில் அவர்கள் இருந்தார்கள். இந்தச் சூழலில் நானும் துளிக்கூட மகிழ்ச்சி காண முடியவில்லை. ராஜாஜி வந்து பொறுப்பேற்றார். அவ்வளவுதான், மின்சாரம் பாய்ந்தது போல் கண நேரத்தில் மாறுதல் ஏற்பட்டு விட்டது. ஒவ்வொருவரும் நிமிர்ந்து உட்கார்ந்து முழு வேகத்துடன் வேலை தொடங்கினர். திறமையின்மை என்பது பற்றி அப்புறம் பேச்சே கிடையாது. தங்கள் பணியில் ஆழ்ந்த பற்றுக் கொண்ட அற்புதமான மந்திரிகளை அவர் தேர்ந்தெடுத்தார். ராஜ்யம், அதன் அரசாங்கம், மக்கள் எல்லாமே க்ஷேமம் கண்டன.

அந்த நாட்களை என்னால் என்றும் மறக்க முடியாது. அப்போது பிரத்தியேகமாக ராஜாஜி என்னிடம் காட்டிய மகத்தான அன்புக்காகவும், பாசத்துக்காகவும், என் பணிக்கு அவர் தந்த ஊக்கத்துக்காகவும் உதவிக்காகவும் நான் என்றென்றும் அவரிடம் நன்றி கொண்டிருப்பேன். என்னுடைய சிறுபிள்ளைத்தனத்தால் அவரைப் பலமுறை நான் உபத்திரவப்படுத்தியிருக்கக் கூடும். நான் ஒரு கவர்னர்; ஆனபடியால் கௌரவத்துடனும் கண்ணியத்துடனும் நடந்து கொள்ள வேண்டும் என்று அவர் அடிக்கடி ஞாபகப்படுத்துவார். ஆனால் இப்போது எழுபத்தேழு வயதான தசையிலும் என்னால் கௌரவம் கண்ணியம் என்கிற நல்லியல்புகளைப் பெற முடியவில்லை. ராஜாஜியோ இவற்றைப் பரிபூரணமாகப் பெற்றிருக்கிறார்.

இதற்குச் சில வருஷங்கள் முற்பட்டுச் செல்கிறேன். காந்திஜியுடன் ராஜாஜி ஒரே நோக்காகக் காண முடியாதிருந்த காலத்துக்குச் செல்கிறேன். கடுமையான ஒழுக்கக் கட்டுப்பாடுகளைப் பின்பற்றும் ராஜாஜி முடிந்த வரையில் காங்கிரஸின் உத்தரவுகளைப் பின்பற்றியே வந்தார். ஆயின், தீங்கு விளைவிக்கக்கூடிய ஒரு கொள்கை பின்பற்றப்படுகிறது என்று அவர் உணர்ந்தபோது விலகுவதற்கு முடிவு செய்தார். தனிநபரின் சட்டமறுப்பு என்ற திட்டத்தை 1940ல் காந்திஜி வகுத்துக் கொண்டிருந்த போது அவருடனேயே சேவாக்கிராமத்தில் நான் இருந்தேன். ஒரு பிற்பகல் ராஜாஜி துயரமான பாவத்துடன் காந்திஜியின் குடிலிருந்து வெளியே வந்தார். காந்திஜியுடன் தாம் நடத்திய பேச்சில் அவருக்குத் திருப்தியில்லை. என்னிடம் அது பற்றிச் சொன்னார். அவர் காந்திஜியின் திட்டத்துக்கு இணங்காதபோதிலும், இந்தக் குறிப்பிட்ட இயக்கத்தில் கலந்துகொண்டு சிறை வாழ்வை வரவேற்றார். நாங்கள் அனைவருமே இப்படிச் செய்ய வேண்டும் என்பதுதான் காந்திஜியின் விருப்பம்.

இருந்தாலும் இரண்டு வருஷங்களுக்குப் பிற்பாடு வெளிப்படையாகவே முறிவு ஏற்பட்டுவிட்டது. 1942ல் நடந்த 'வெள்ளையனே, வெளியேறு' இயக்கத்தில் ராஜாஜி கலந்து கொள்ளவில்லை. என்றாலும் சிக்கலை எளிதாக்கி, காங்கிரஸுக்கும் பிரிட்டிஷ் ஆட்சியாளருக்கும் விவேகம் உண்டாக்குவதற்காக அவர் சுறுசுறுப்புடன் பணி புரிந்து கொண்டேயிருந்தார். அவரது இலட்சியங்களைச் சந்தேகித்து வந்தவர்களும், அவரிடம் திறம் போதவில்லை என்று கருதியவர்களும் உள்பட எவருமே அவரிடம் மிகுந்த மரியாதை கொள்ளாதிருக்க முடியவில்லை. சுதந்திர இந்தியா முதலில் அவரை மேற்கு வங்க கவர்னராக்கியது; பிறகு முதல் இந்திய கவர்னர் ஜெனரலாகவும் ஆக்கியது. இவ்வளவு பெரும் பதவிகளை வகித்தபோதும், பிற்பாடு அவர் ஜவாஹர்லால் நேருவின் அழைப்பின் மீது மத்திய மந்திரியாவதற்கு மறுக்கவில்லை. அதன் பின்பு சென்னையின் முதன் மந்திரியாகி அந்த ராஜ்யத்துக்கு நேர



நாற்பத்தேழாண்டுகளாக ராஜாஜியுடன் தொடர்பு கொண்டவரும், அவரிடம் அளவற்ற மதிப்பும் அன்பும் கொண்டவருமான ஸ்ரீ ஸ்ரீபிரகாசா அவர்கள் எழுதிய இந்த அருமையான கட்டுரையைப் பிரசுரிப்பதில் பெரு மகிழ்ச்சி கொள்கிறோம். — ஆசிரியர்.

விருந்த விபத்திலிருந்து அதை மீட்கவும் அவர் தயங்கவில்லை.

இன்று நாட்டில் நடக்கும் பல சம்பவங்களைக் கண்டு துயரமுற்று அவர் வாரந்தோறும் தமது 'ஸ்வராஜ்யா' பத்திரிகையில் இதயத்தைத் திறந்து கொட்டி வருகிறார். மக்கள் செய்யும் தவறுகளை எடுத்துக்காட்டி எச்சரித்து, அவர்களுக்குச் சீலம், சீரிய சிந்தனை, நன்னடத்தை, தருமம் ஆகியவற்றின் மார்க்கத்தைக் காட்டுவதற்காக ஊர் ஊராக அலைந்தும் வருகிறார். சீலமும் தருமமும் சீரிய சிந்தனையும் நன்னடத்தையும் இருந்தால் தான் நம் சுதந்திரத்துக்கு அர்த்தமுண்டு; அப்போதுதான் நாட்டில் உண்மையான நல்ல திருவாகத்தை நிலைநாட்ட முடியும்.

ராஜாஜியின் தனி வாழ்வு மிகவும் எளிமையானது. எளிய ஆடை, எளிய உணவு, வாழ்க்கையின் எந்நிலையிலும் எளிய பழக்கங்கள் ஆகியவற்றைக் கைக் கொண்டவர் அவர். பெரும் பதவிகள் அவரைப் பொறுத்த மட்டில் ஒன்றுமேயில்லை. தனி வாழ்வில் அவர் ஓர் ஆதரிச நண்பர்; ஆதரிச இல்லறம் நடத்துபவர். விரிந்த பேரறிவு படைத்தவரேனினும், தமது கல்வியை வெகு இலேசாகத் தாங்குபவர். அதைப் பகட்டாகக் காட்டுவதே இல்லை. ராஜ சபையில் வளர்க்கப்பட்டவர் போன்ற பண்பான நடத்தை பொருந்தியவர். பொதுவிடத்திலும் தனியிலும் அவர் நடந்து கொள்ளும் பான்மை, பேசும் பாங்கு இவற்றைக் கண்டு நான் பல சந்தர்ப்பங்களில் பெரிதும் மலைத்திருக்கிறேன். உதாரணமாக, கயா மகாநாட்டின் போது கூட்டத்தினரில் சிலர் அவர் மேடையில் மேலும் சற்று முன்னால் வந்து பேச வேண்டுமென விரும்பினர். அப்போது அவர், ''இன்னும் முன்னால் வந்தால் நான் அக்கிராசனருக்கு என் முதுகைக் காட்ட வேண்டியிருக்குமே! அவ்வாறு எப்படிச் செய்ய முடியும்?'' என்று கேட்டார். (ஸ்ரீயுத ஸி. ஆர். தாஸ் அவ்வருட அக்கிராசனர்.)

வாழ்க்கையில் பரம உத்தமமான மரியாதைப் பண்புகளைக் கடைப்பிடிப்பவர் அவர். மற்றவர்களும் மரியாதைப் பண்பில் சிறந்து விளங்க வேண்டுமென அவர் விரும்புவதாக நினைக்கிறேன். 'மானுட உறவுகள் என்ற இயந்திரத்தைச் சுகமாகவும் திருப்திகரமாகவும் இயக்கி வைக்கும் எண்ணெய் பண்பான நடத்தையே'' என்று அவர் ஒரு சமயத்தில் கூறியதை நினைவு வைத்திருக்கிறேன்.

துரதிருஷ்டவசமாக வாழ்நாள் முழுதுமே ராஜாஜி நல் ஆரோக்கியம் பெற்றிருக்கவில்லை. ஆஸ்துமாவினால் அவர் பயங்கரமாகப் பாதிக்கப்பட்டிருந்தார். ஆஸ்துமா மிகவும் கொடுமை செய்யும் நோய். ஆயினும் எப்படியோ விந்தையாக அவர் ஆஸ்துமாவைக் குணப்படுத்திக் கொண்டு விட்டார்.

## அரசியல் சேறு

> என்னுடைய வாழ்க்கை வியர்த்தமாய்ப் போயிற்றே என்று தோன்றுகிறது: இந்த அரசியல் சேற்றில் ஏன் இறங்கினேம் என்ற எண்ணம் உண்டாகிறது. ஆனல் சேற்றில் இறங்கி உழுது நடவு நட்டுக் களை பிடுங்கினல்தான் பிறகு அறுவடை செய்யலாம். ஒருவரும் சேற்றில் இறங்காமலே இருந்து விட்டால் தானியம் எப்படி விளையும்? —ராஜாஜி

இம்மாதிரி வேறு யாருமே குணமானதாக தான் கேட்டதில்லை. பண்டித மோதிலால் நேரு, டாக்டர் ராஜேந்திர பிரசாத், ஆசாரிய நரேந்திர தேவர் உள்ளிட்ட பல முன்னணி காங்கிரஸ் தலைவர்கள் ஆஸ்துமாவினல் பாதிக்கப்பட்டிருக்கிறர்கள். ஆனல் அவர்கள் இறுதி வரையில் இந்நோயால் அவதிப்பட்டனர். ராஜாஜி தமது சங்கற்ப பலம் ஒன்றுலேயே குணம் செய்து கொண்டார். தமது உணவின் அளவையும், தரத்தையும், போஜன காலத்தையும் அவர் ஒழுங்கு செய்து கொண்டார். தகுந்த எளிய தேகாப்பியாசங்கள் செய்தார். முடிவில், மிக உயர்ந்த படி வரிசைகள் ஏறவும், அறிவுக்கும் உடலுக்கும் பெரும் ஆயாசம் தரக்கூடிய கடும் பணிகளைச் செய்யவும் அவர் ஆற்றல் பெற்ருர்.

'இலட்சிய மனிதர்' என்ற சொற்றெடருக்கு எல்லாவிதத்திலும் ஓர் இலக்கணம் ராஜாஜி. இதில் சந்தேகமில்லை. கீழ்த்தரமான அல்லது மறைமுகமான காரியத்தைச் செய்ததாக அவரை நோக்கி யாரும் விரலைச் சுட்ட முடியாது. அவர் என்றும் சத்தியத்தைப் பற்றியவர். ஜனங்களின் கவர்ச்சியை இழுக்கச் செய்யும் லட்சியங்களை எடுத்தியம்பும் மனே தைரியம் வாய்ந்தவர். விரோதிக் கூட்டங்களுக்கு முகம் கொடுத்தவர். பெருத்த அதிகாரம் பெற்றவருக்கும் சவால்விடுத்தவர்.

அவரோடு சம்பாஷிக்கும் வாய்ப்பு ஒரு ரம்மியமான கௌரவம். அவரோடு சிறிது காலம் பரிசயம் கொள்ளும் நல்லதிருஷ்டம் பெற்ற எவரும், முன்னைவிடச் சிறிதேனும் விவேகம் பெருதிருக்க முடியாது. அவரிடம் தொடர்பு கொண்டவருக்கு முன்னைவிட விஷய ஞானம் — வாழ்க்கையில் உதவக்கூடிய விஷய ஞானம் — ஏற்படுவது திண்ணம். உதாரணமாக, ராஜாஜியுடன் ஒருசில நிமிடங்களே உரையாடவிருந்த அமெரிக்க ஜனதிபதி கென்னடி, அவரது பேச்சினல் ஆழ்ந்து கவரப்பட்டு, தமது மற்ற முக்கிய அலுவல்களையும் ரத்துசெய்து விட்டு ராஜாஜியுடன் நீண்ட நேரம் சம்பாஷித்தார். அதோடு ராஜாஜியின் சந்திப்பு தம்மைப் பண்படுத்திய மகத்தான சக்திகளில் ஒன்று என்று அவர் பிற்பாடு சொன்னதாகத் தெரிகிறது.

பொதுவாக அரசியல்வாதிகள் வார்த்தைப் பந்தலில் ஆசை கொண்டவர்கள். விஷயத்துக்கு வருமுன் சுற்றி வளைத்துப் பேசுவதே அவர்களுடைய இயல்பு. ஆனல் ஒரு சிறிய எல்லைக்குள் பெரிய பல விஷயங்களுக்கு இடம் தருவதில் ராஜாஜி மந்திர ஜால சாமர்த்தியம் பெற்றவர். சாமானிய மக்களும் அநுபவபூர்வமாகக் காணக்கூடிய மிகவும் சாமானியமான அன்றட வாழ்க்கை நிகழ்ச்சியிலிருந்தே கதைகள் புனைந்து அவரால் சிக்கலான பிரச்னைகளை விளக்க முடிகிறது. இவ்வாறு எளிய முறையிலேயே அவர் புராதன பாரதத்தின் ஆசாரிய புருஷர்கள் போல, தமது கருத்துக்களின் சத்தியத்தையும் அவை நடைமுறையில் சாத்தியமானவை என்பதையும் உணர்த்தி விடுகிருர். ஒரு பிரச்னையின் இரு வேறு தரப்புக்களையும் அவரது திட்சண்யமான அறிவு அடுத்தடுத்து எவ்வளவு அழுத்தமாக நிலைநாட்டுகிறது என்பதை நான் அடிக்கடி கண்டிருக்கிறேன். இவ்வாறு மாற்றுத் தரப்புக்களை அவரே எடுத்துக் கொண்டு விளக்குவதால், தம்மோடு பேசுபவரை முட்டாளாக்கிக் களிக்கிருர் என்று சிலர் சந்தேகிப்பதை அறிவேன். ஆனல் இவர் மிகவும் நல்லவர்; மிகவும் பெரியவர். இது போன்ற ஒரு மனப்பான்மைக்கு அவர் இடம் கொடுக்கவே முடியாது. அவரது அறிவின் உயர்வு வெகு இடமாக இருக்கையில், அவர் பிறரை முட்டாளாக்கிப் பார்க்க வேண்டிய அவசியமே யில்லை.

அதிருஷ்டவசமாக அவரை அற்புதங்கள் எதுவும் சூழ்ந்திருக்கவில்லை. எல்லா மானுடர்களையும் போல் அவரும் ஒரு மானுடர். எனவே, மற்றவர்களும் அவரைப் போல் வாழ முடியும். அவரது உன்னத நிலையை எல்லோரும் அடைய முடியாதெனினும், அவரவரது சிறிய எல்லைக்குள் ஒவ்வொருவரும் நல்லவராக, பெரியவராக இருக்க முடியும். இத்தேசம், உலகம் என்ற விரிந்த எல்லையில் ராஜாஜி காட்டும் நல்லியல்பை, மகத்துவத்தை அனைவரும் தத்தம் அளவுக்குள் காட்ட முடியும்.

ஏராளமான விஷயங்களைப் படிக்கவும், விஸ்தாரமாக வாழ்க்கையின் சகல அம்சங்களையும் காணவும் அவர் தமது பொதுப் பணிச் சுமைக்கு இடையே எப்படி அவகாசம் காண்கிருர் என்பது அதிசயமானது. கடிதத் தொடர்பு கொள்ளுவதில் அவர் மிகுந்த கவனம் செலுத்துபவர். பரந்து விரிந்த நண்பர் குழாத்துடன் தொடர்பு விட்டுப் போகாதவர். நான் செய்த, அல்லது எழுதிய ஏதாவதொன்றைப் பாராட்டி அவரிடமிருந்து அவ்வப்போது கடிதம் பெற்று ஆச்சரியம் அடைந்திருக்கிறேன். உறவினர்களை இழந்த போது அவர் தெரிவித்திருக்கும் அநுதாபத்தாலும், என் துயரங்களில் அவர் தந்த ஆறுதல்களாலும் என் நெஞ்சு நெகிழ்ந்திருக்கிறது.

அவர் நீண்ட காலம் நம்மிடை வாழ்வாராக! இந்தச் சமயத்தில் அவர் நமக்கு மிக மிகத் தேவைப்படுகிருர். நடைமுறைக்கு உகந்த ஞானத்தைச் சொல்லும் அவரது குரலை அதிகாரத்திலுள்ளோர் கேட்பார்களாக! அவர்களுக்கும், இந்தத் தேசம் முழுவதற்கும் நன்மையே பயக்கக்கூடிய ராஜாஜியின் ஆலோசனையையும் வழித் துணையையும் ஆட்சியாளர்கள் நாடுவார்களாக!

# கல்லுக்குள் ஈரம்

ர.சு.நல்லபெருமாள்



வெள்ளி விழா இரண்டாவது பரிசு நாவல்

வெடி குண்டுகளை இணைக்கும் மின்சாரக் கம்பிகள் கிடைத்ததும், திரிவேணி டார்ச்சை இடுப்பில் செருகிக் கொண்டு மின்சாரக் கம்பியைப் பல்லினல் கடித்துப் பார்த்தாள். கம்பியை மூடியிருந்த ரப்பர் மட்டும் பிய்ந்து அவள் வாயில் வந்தது. அதைத் துப்பிவிட்டு உள்ளேயிருந்த இரண்டு செப்புக் கம்பிகளைக் கடித்துப் பார்த்தாள். அவைகள் இலேசில் அறுபடுவதாகத் தெரியவில்லை. ஆகவே இடுப்பில் செருகியிருந்த குறடை எடுத்து இரண்டு கம்பிகளையும் துண்டித்தாள். துண்டித்த கம்பிகள் நழுவி ஆற்றில் விழுந்து பயங்கரவாதிகளை உஷார்ப்படுத்தி விடாமல் இருப்பதற்காக ஒரு கையால் கம்பிகளைப் பிடித்து இழுத்து, பாலத்தின் பக்கவாட்டில் இருந்த இரும்புத் தூணுடன் சேர்த்துக் கட்டி விட்டாள்.

வெடிகுண்டுக்கும் பேட்டரிக்கும் உள்ள தொடர்பை அறுத்து விட்ட பிறகு மிகுந்த மனத் திருப்தியுடன் திரும்பிப் பார்த்தாள். வெகு தூரத்தில் ரயில் வண்டியின் வெளிச்சம் தெரிந்தது. நெற்றியில் வழிந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டாள். தூரத்தில் ரயில் எஞ்சினின் விசில் சத்தம் கேட்டது. பரபரப்புடன் கடிகாரத்தைப் பார்த்தாள். பத்து பத்து.

இன்னும் ஐந்து நிமிஷங்களில் ரயில் வண்டி, பாலத்தை நெருங்கிவிடும். நெஞ்சு படபட வென்று அடித்துக் கொள்ள மிகுந்த பரபரப்புடன் வந்த பாதையில் திரும்பி வேகமாக நடக்கத் தொடங்கினாள்.



ஃ ஃ ஃ

"வெறும் பிரமைதான்" என்றான் ரங்கமணி.

"சேச்சே, கறுப்பாக ஏதோ ஒன்று பாலத்தின் விளிம்பில் அசைந்ததுமாதிரி இருந்தது" என்றான் காசிலிங்கம்.

"வயல் பக்கம் வந்த பன்றி ஏதாவது இருக்கும்" என்றான் மீனாட்சிநாதன்.

''இவ்வளவு உயரத்தில் இருக்கும் ரயில் பாதையில் பன்றி எப்படி ஏறும்? மேலும் பாலத்துக்குப் பக்கத்தில் வந்து மறைந்து விட்டதே!'' என்றான் காசிலிங்கம், சந்தேகத்துடன்.

உடனே நரி ஊளையிடுவது போல் ரங்கமணி சத்தம் கொடுத்தான். சற்றுத் தள்ளியிருந்த புதருக்கிடையே இருந்து பதில் ஊளைச் சத்தம் கேட்டது. ஆனால் பாலத்திலிருந்து எந்தப் பதிலும் வரவில்லை.

''ஒன்றுமில்லை. இருட்டில் ஏதோ பிரமை. அவ்வளவுதான்'' என்றான் ரங்கமணி.

மரத்தில் இருப்பவர்களும், புதரில் ஒளிந்திருக்கும் சர்தாரும் பேச்சுத் தொடர்பு கொள்வதற்கு போன் கருவியை வைத்திருந்தார்கள். சர்தார் போனில் பேசுவது கேட்டது.

''ஏன் சப்தம் கொடுத்தீர்கள்?'' — சர்தார் கேட்டார்.

''பாலத்துக்குப் பக்கத்தில் கறுப்பாக ஏதோ தெரிந்தது..... சப்தம் கொடுத்துப் பார்த்தோம்'' என்று பதில் சொன்னான் மீனாட்சிநாதன்.

''என்ன அது?''

''ஒன்றுமில்லை. இருட்டில் ஏதோ தெரிந்ததாகக் காசி சொன்னான்.''

''சரி, ஜாக்கிரதையாக இருங்கள்'' என்றார் சர்தார்.

ஆலமரத்தின் உச்சிக் கிளையில் உட்கார்ந்திருந்த ஓர் ஆந்தை இறக்கையைப் படபடவென்று அடிக்கவே, இலைகளில் ஒட்டியிருந்த மழைத் துளிகள் மழை பெய்வதுபோல் கீழே உதிர்ந்தன.

''சேச்சே...'' என்று எரிச்சலுடன் மேலே விழுந்த மழைத் துளிகளைத் துடைத்துக் கொண்டார்கள்.

''மணி என்ன?'' என்று ரங்கமணி கேட்டான்.

''பத்து ஐந்து'' என்றான், காசிலிங்கம்.

''அதோ ரயில் வண்டி தூரத்தில் தெரிகிறதே...அந்த வெளிச்சம் ரயில் எஞ்சினில் உள்ளதுதான்'' என்றான் மீனாட்சிநாதன்.

''இன்னும் சேர்மாதேவி ஸ்டேஷனை நெருங்கியிருக்காது'' என்றான் ரங்கமணி.

''ஏய்...ஏய், பாலத்தைப் பார்...! ஏதோ வெளிச்சம் தெரிகிறது'' என்றான் காசிலிங்கம், பரபரப்புடன்.



மூவரும் பாலத்தை உற்றுப் பார்த்தார்கள். மூன்றாவது கண்வாய்ப் பக்கம் ஏதோ ஒரு மங்கலான வெளிச்சம் தண்டவாளத்தின் மீது தோன்றித் தோன்றி மறைவது போலிருந்தது. பாலத்தின் மீதிருந்த பிரும்மாண்டமான கூண்டின் இரும்புத் தூண்கள், குறுக்கும் நெடுக்குமாக அமைந்திருந்ததால், தெளிவாக எதையும் காண முடியவில்லை.

''என்னவாயிருக்கும்? யாராவது தண்டவாளத்தில் டார்ச்சை அடித்துப் பார்க்கிறார்களோ?'' என்று ரங்கமணி சந்தேகத்துடன் கேட்டான்.

''நிலவு வெளிச்சம் தண்டவாளத்தின் மீது பிரதிபலிக்கிறதோ என்னவோ?'' என்றான் மீனாட்சிநாதன்.

''நமக்கு எதிராக நம்முடைய முயற்சியை முறியடிக்க முயலுகிறார்களோ... அப்படி இருக்க முடியாது; இது யாருக்கும் தெரிய நியாயம் இல்லையே?'' என்றான் ரங்கமணி. பிறகு சொன்னான்: ''அப்படியே தெரிந்தாலும் நம்மைச் சூழ்ந்து கொண்டு தாக்குவார்களே தவிர, இப்படியா இரகசியமாக வருவார்கள்?''

''பாலத்திலிருந்து இங்கு வரும் 'ஒயர்' கம்பி அசைவது போலிருக்கிறதே... மீனாட்சி, இதைக் கவனி'' என்றான் காசிலிங்கம், பரபரப்புடன். மீனாட்சிநாதன் தொட்டுப் பார்த்தான். அது பலமாக ஆடிக் கொண்டிருந்தது. மரக் கிளையோடு கம்பியைச் சேர்த்துக் கட்டியிருந்ததால், அந்தக் கிளையும் ஆட்டம் கண்டது. சிறிது நேரத்தில் அந்த ஆட்டம் நின்று விட்டது.

''காற்று பலமாக அடிக்கிறதல்லவா? அதனால் 'ஒயர்' ஆடியிருக்கும். வீணான சந்தேகங்களை யெல்லாம் கிளப்பிக்கொண்டிருக்காதே'' என்று எரிந்து விழுந்தான் மீனாட்சிநாதன்.

''வண்டி சேரமாதேவி ஸ்டேஷனைக் கடந்து விட்டது. அந்தத் திருப்பத்தில் வண்டி திரும்பியதும், வெளிச்சம் இந்தப் பக்கம் நன்றாகத் தெரியும்'' என்றான் ரங்கமணி. கைக்கடிகாரத்தைப் பார்த்தான், காசிலிங்கம்.

பத்தே காவ்...

ரயில் வண்டியின் இரைச்சல் தெளிவாகக் கேட்டது. சர்தார் போன் மூலம் பேசினார்.

''கவனமாக இருங்கள். ரயில் வண்டி நெருங்கிக் கொண்டிருக்கிறது'' என்றார் சர்தார்.

''தயாராய் இருக்கிறோம்'' என்று பதில் சொன்னான் மீனாட்சிநாதன்.

ரங்கமணி, மரத்தின்மீதிருந்தவாறே சுற்று முற்றும் பார்த்தான். ஆற்றங்கரைக்கு வரும் வண்டிப் பாதையில் வேகமாகக் கார் ஒன்று வரும் வெளிச்சம் தெரிந்தது.

''ஏய்... ஏய்... ஆற்றுப் பாலத்தில் ஏதோ ஒரு கார் வேகமாக வருவது போலிருக்கிறதே'' என்றான் ரங்கமணி பரபரப்புடன். மற்ற இருவரும் அவன் காட்டிய திசையில் பார்த்தார்கள். திடுக்கிட்டார்கள்.

''ஜீப் மாதிரி தோன்றுகிறதே'' என்றான் காசிலிங்கம்.

''இந்தச் சமயத்தில் இந்தப் பாதையில் கார் வர வேண்டிய அவசியம் இல்லையே'' என்று மீனாட்சிநாதன் முனகினான்.

''சர்தாரிடம் சொல்லு... சீக்கிரம்'' என்று பதறினான் காசிலிங்கம். உடனே ரங்கமணி போனில் பேசினான்.

''தூரத்தில் இந்தப் பாதையில், ஒரு கார் வருவதுபோல் தெரிகிறது'' என்றான்.

''எந்த மாதிரி கார்? ஜீப் காரா?'' என்று கேட்டார் சர்தார்.

''நன்றாகத் தெரியவில்லை... காரின் வெளிச்சம்தான் தெரிகிறது.''

''பக்கத்தில் வந்துவிட்டதா?''

''பாதையில் ஒரு செங்கற் சூளை இருக்கிறதே, அதன் பக்கத்தில் வந்து கொண்டிருக்கிறது.''

''ஜாக்கிரதையாக இருங்கள். ரயில் வண்டி நெருங்கி விட்டது. வெடிகுண்டு வெடித்தவுடன் எல்லோரும் ரயில் பாதையின் மேட்டில் ஏறி மறு பக்கம் இறங்கி ஓடுங்கள்'' என்றார் சர்தார். அப்போது காசிலிங்கம், மிகுந்த பரபரப்படைந்தவனாய் ''ஏய், ரங்கமணி, பாலத்தில் பார், யாரோ ஊர்ந்து செல்வது போலிருக்கிறது'' என்றான்.

மூவரும் பாலத்தைப் பார்த்தார்கள். நிலவொளி மங்கலாகப் படர்ந்திருந்தது. யாரோ ஒரு நபர் பாலத்துக்குள்ளிருந்து வெளிப்பட்டுத் தண்டவாளத்தின் வழியாகவே ஊர்ந்து செல்வது நிலவொளியில் மங்கலாகத் தெரிந்தது.

ரங்கமணி, நரி ஊளையிடுவது போல் சத்தமிட்டான். உடனே பக்கத்துப் புதரிலிருந்து பதில் ஊளைச் சத்தம் கேட்டது. ஆனால் பாலத்துக்குப் பக்கத்தில் தெரிந்த உருவத்திடமிருந்து ஒரு சப்தமும் வரவில்லை. மரத்தின் மீதிருந்த மூவரும் பரபரப்படைந்தனர். காசிலிங்கம் உடனே போனில் பேசத் தொடங்கினான்.

''பாலத்தின் மீது யாரோ ஒரு நபர் பதுங்கிச் செல்வது தெரிகிறது. நம்மில் யாராவது அங்கு சென்றிருக்கிறார்களா?'' என்று கேட்டான்.

''இல்லேயே, யாரும் போகவில்லே'' என்று பதில் சொன்னர் சர்தார்.

'' ஆசாமி, பாலத்துக்குள்ளிருந்து வெளிப்பட்டுப் பதுங்கிப் பதுங்கித் தண்டவாளத்தில் ஊர்ந்துசெல்கிருன்.''

''நமக்கு எதிராக ஏதோ சதி நடக்கிறது... அந்த நபரைத் தீர்த்துவிடு... சீக்கிரம்... ரயில் வண்டி திருப்பத்தில் திரும்புவதற்குள் அவனேத் தீர்த்துவிடு'' என்று சர்தார் கட்டளே யிட்டார்.

காசிலிங்கம் போனே மீனுட்சிநாதனிடம் கொடுத்துவிட்டு ரங்கமணியிடம் திரும்பினன்.

''நமக்கு எதிராக ஏதோ சதி நடக்கிறது. உன் கைத் துப்பாக்கியை இப்படிக் கொடு'' என்று ரங்கமணியின் இடுப்பிலிருந்த கைத் துப்பாக்கியை உருவி வெளியே எடுத்தான் காசிலிங்கம்.

''யாரோ வழிப்போக்கனுக இருக்கும். தவறுதலாகச் சுட்டுவிடாதே'' என்று எச்சரித்தான் ரங்கமணி.

''வழிப் போக்கன், தண்டவாளத்தின்மீது ஊர்ந்து செல்வானேன்? நமக்குத் தெரிந்து விடக்கூடாது என்பதற்காகத்தான் பதுங்கிச் செல்கிருன்...... அவனேத் தீர்த்துவிடும்படி சர்தார் உத்தரவிட்டு விட்டார்'' என்று கூறிக் கொண்டே காசிலிங்கம் கைத் துப்பாக்கியை நீட்டித் தண்டவாளத்தின் பக்கத்தில் தெரிந்த உருவத்தின்மீது குறி பார்த்தான்.

தூரத்தில் தெரிந்த காரின் வெளிச்சம் சமீபித்து விட்டது. அது ஒரு ஜீப் என்பது நிலவொளியில் நன்கு தெரிந்தது. ஆலமரத்துக்கும் கோயிலுக்கும் இடையில் கார் நின்றதும், அதிலிருந்து பல போலீஸ்காரர்கள் கீழே குதித்தார்கள். எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்த மீனுட்சிநாதன் பதற்றத்துடன் போனில் பேசினன். ''போலீஸ் வந்து விட்டது'' என்ருன்.

''பரவாயில்லே. ரயில் வண்டியும் வந்துவிட்டது.... வேலேயை முடித்துவிடலாம்.... வேலே முடிந்ததும் தப்பி ஓடுங்கள்'' என்ருர் சர்தார்.

ரயில் வண்டி திருப்பத்தில் திரும்பியதும் என்ஜினின் முன் விளக்கின் வெளிச்சம் குபீரென்று அந்தப் பிராந்தியம் முழுதும் பரவியது.

போலீஸார் தடுப்பதற்குள் ரயில் வண்டியைக் கவிழ்த்துவிட வேண்டும் என்று துடித்தான் ரங்கமணி.

ரயில் வண்டியின் வெளிச்சம், அந்தத் திசையில் வீசியதும் தண்டவாளத்தின் பக்கத்திலிருந்த உருவம் திடீரென்று எழுந்து நிற்பதை ரங்கமணி கவனித்தான்.

''காசி, அது ஒரு பெண்...சுடாதே!'' என்று ரங்கமணி சொல்லி வாய் மூடு முன் துப்பாக்கியிலிருந்து இரண்டு குண்டுகள் பறந்து விட்டன.

''டுமீல்... டுமீல்...''

அந்தப் பிராந்தியம் முழுவதும் துப்பாக்கியின் வெடிச் சத்தம் பரவி எதிரொலித்தது. அதைத் தொடர்ந்து ''அம்மா...'' என்று ஒரு பெண் அலறும் குரலும் கேட்டது. மறு கணம் தண்டவாளத்துக்குப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த உருவம் மேட்டிலிருந்து கீழே உருண்டு உருண்டு ஆலமரத்தின் அடியில் வந்து விழுந்தது. அதே சமயம் போலீசின் விசில் சத்தமும் காதைத் துளேத்தது.

ரயில் வண்டி பாலத்தை நெருங்கி விட்டது. ரங்கமணி மனம் பதறி நின்ருன். பிறகு சமாளித்துக் கொண்டு போனேக் காதில் மாட்டிக் கொண்டான். திரும்பிப் பாலத்தைப் பார்த்தான். பாலத்தின் மீது ரயில் வண்டி ஓடிக் கொண்டிருந்தது.

திடீரென்று சர்தாரிடமிருந்து வந்த கட்டளே ரங்கமணியின் காதில் தெளிவாக ஒலித்தது —

''ரெடி.... ஒன்று... இரண்டு .... மூன்று.....அழுத்து '' என்று சர்தார் கட்டளேயிட்டார்.

பாட்டரியின் விசையை அழுத்தினுன் ரங்கமணி.

ஒன்றும் நிகழவில்லே!

ரங்கமணியைத் தள்ளிவிட்டு மீனுட்சிநாதன் விசையை அழுத்தினுன்.

ஒன்றும் நிகழவில்லே!

ரயில் வண்டி பாலத்தின் முக்கால் பகுதியைக் கடந்து விட்டது.

மீண்டும் விசையை அழுத்திப் பார்த்தான், மீனுட்சிநாதன்.

பயனில்லே!

## இனிப்பும் காரமும்

தித்திப்புப் பண்டங்களேச் சாப்பிடும்போது சிறிது காரமும் சேர்த்துக் கொண்டால் இன்னும் அதிகமான பண்டங்களேச் சாப்பிட முடியும். அதுபோல் ஜனங்கள் தங்களுடைய வாழ்க்கையில் சந்தோஷத்தோடு சிறிது கஷ்டத்தையும் அநுபவித்தால்தான் இன்னும் அதிக சந்தோஷத்தை அடைய முடியும்.

— ராஜாஜி

வெறி கொண்டவனைப்போல் பல முறை அழுத்தினான்.

ஒன்றுமே நிகழவில்லை.

போலீசின் விசில் சத்தமும், போலீஸ்காரர்களின் பூட்ஸ் சப்தமும் சுற்றிச் சூழ்ந்தன.

''என்ன...? என்ன நடந்தது ...ஏன் தாமதம்?''—சர்தாரின் குரல் போனில் அலறியது.

''வெடிக்கவில்லை'' — ரங்கமணி பதில் சொன்னான்.

ரயில் வண்டி பாலத்தைக் கடந்து, வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. போலீஸ்காரர்களின் பேட்டரி விளக்கு ஒளி பல திசைகளிலும் பாய்ந்தது. ''எல்லாரும் தப்பி ஓடுங்கள்'' என்று சர்தார் கட்டளை இட்டுவிட்டுப் புதரிலிருந்து வெளிப்பட்டுக் கரையோரமாகவே புதர்களுக்கிடையில் பதுங்கியவாறே ஓடினார். புதருக்குள்ளிருந்த மற்றவர்களும் தப்பி ஓடினார்கள். காசிலிங்கமும் மீனாட்சிநாதனும் மரத்திலிருந்து கீழே குதித்துத் தலைதெறிக்க ஓடினார்கள். ரங்கமணி கீழே குதித்து ஓட முயன்றபோது, அவன் கால்களில் ஏதோ தட்டித் தலைகுப்புற விழுந்தான். திடுக்கிட்டு எழுந்து நின்று பார்த்தான். அவன் காலடியில் யாரோ விழுந்து கிடந்தது தெரிந்தது.

காசிலிங்கம் சுட்டுக் கொன்ற நபர் தான் அது என்பதை உணர்ந்துகொண்டான். அதே சமயம் அந்த நபர் ஒரு பெண் என்பதை ரயில் என்ஜினின் விளக்கொளியில் கண்ட நினைவும் வந்தது.

சற்றுத் தூரத்தில் ஓடி வந்த போலீஸ்காரர்களின் பேட்டரி விளக்கின் ஒளி அவன் மீது பட்டது. கீழே கிடந்த உடலைத் தாண்டிக் கொண்டு ஓட முயன்றான். ஆனால் அவன் காலைக் கீழே கிடந்த நபர் பற்றிக்கொள்ளவே, அவனால் ஓட முடியவில்லை.

''ஓடாதீர்கள்.... என்னை விட்டு ஓடாதீர்கள்....'' என்று கீழே கிடந்த நபர் முனகுவது கேட்டது. ரங்கமணி திடுக்கிட்டவனாய், பரபரப்புடன் குனிந்து உற்றுப் பார்த்தான். மேகத்திலிருந்து விடுபட்டிருந்த நிலவு, அந்த உருவத்தை அடையாளம் காட்டியது.

''ஐயோ, திரிவேணி...''

அந்தப் பிராந்தியமே நடுநடுங்குமாறு அலறியபடி கீழே உட்கார்ந்துவிட்டான் ரங்கமணி. கீழே கிடந்த திரிவேணியின் தலையைத் தூக்கி மடியில் போட்டுக் கொண்டு கதறினான். அவள் மார்பிலிருந்து இரத்தம் பொங்கிக் கொண்டிருந்தது.

பனார் என்று அவன் முகத்தில் பேட்டரி விளக்கின் ஒளி பாய்ந்தது.

நிமிர்ந்து பார்த்தான். கண்ணீருக்கிடையே டார்ச்சின் ஒளிதான் தெரிந்தது.

''ஆ.... ரங்கமணி....!'' என்று கூவிக்கொண்டே சிவானந்தம், வியப்புடனும், பதற்றத்துடனும் குனிந்தான்.

ரங்கமணி அழுது கொண்டிருந்தான். மடியில் கிடந்த திரிவேணியின் உதட்டில் புன்னகை அரும்பியது. அவளை இரத்த வெள்ளத்தில் கண்ட சிவானந்தம், 'ஐயோ'வென்று அலறிவிட்டான். பிரமை பிடித்துப் போய்க் கல்லாய்ச் சமைந்து விட்டான். தனக்குப் பின்னால் யாரோ விம்மும் குரல் கேட்டுத் திரும்பினான். வாயைப் பொத்திக் கொண்டு அழுதுகொண்டு நின்றார் தீக்ஷிதர். சுற்றி நின்ற போலீஸ்காரர்கள், பேட்டரி விளக்குகளின் ஒளியை ரங்கமணியின்மீது பாய்ச்சிக் கொண்டிருந்தார்கள்.

திரிவேணி மெதுவாகக் கையை அசைத்தாள். ரங்கமணி குனிந்து அவளைப் பார்த்தான். அவள் பேச முடியாமல் திணறினாள்.

''இவ்வளவு பக்கத்தில் இருந்தும் உன்னைக் காப்பாற்ற முடியாமல் போய் விட்டேனே திரிவேணி....'' என்று புலம்பினான் ரங்கமணி.

''நல்லவேளை, கடைசியில் உங்களைப் பெரும் பழியிலிருந்து காப்பாற்றி விட்டேன்....எனக்கு வாக்குக் கொடுப்பீர்களா...?'' என்று மூச்சுத் திணறியபடி கேட்டாள் திரிவேணி.

அவள் கைகளைப் பற்றித் தன் நெஞ்சில் வைத்து அழுத்திக் கொண்டான் ரங்கமணி. அந்த ஸ்பரிசத்தால் திரிவேணியின் முகம் மலர்ந்தது.

''மகாத்மாவை ஒருமுறை பாருங்கள். எனக்காக... எனக்காக....'' — திரிவேணி திக்கித் திணறினாள். மூச்சு வாங்கியது. கண்கள் இருண்டன. முகத்தில் சோர்வு படிந்தது.

''கட்டாயம் பார்க்கிறேன்'' என்று கூறிக்கொண்டே அவள் கரங்களை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டான். அவன் கண்களிலிருந்து பெருகிக் கொண்டிருந்த கண்ணீரைத் திரிவேணியின் வலுவிழந்த விரல்கள் மெதுவாகத் துடைத்தன. மறுகணம் அவன் பிடியிலிருந்து அவளுடைய கரங்கள் துவண்டு கீழே விழுந்து விட்டன. கண்கள் மூடி விட்டன. உதட்டில் மட்டும் புன்னகை மாறவில்லை.

**(தொடரும்)**

# பிராயச்சித்தம்

மீனாட்சி கிருஷ்ணா

பிஹாரில் பஞ்சம்!

அந்தப் பிரதேசத்தில் இது ஒன்றும் புதிய செய்தி அல்ல. ஆண்டுக்கு ஒரு முறையாவது நடக்கும் நிகழ்ச்சிதானென்றாலும் நமக்கு அன்னம் வழங்கும் வள்ளல் நாடுகள் ராஜீய மொழியாகவும் பத்திரிகை வாயிலாகவும் வெகுவாக மிகைப்படுத்தி விட்டன. நமது பிரதிநிதிகள் பார்லிமெண்டில் சொற்போர் மூலமாகப் பஞ்சத்தைத் தீர்த்துக் கட்டி விடுவது என்று ஆவேசமாக வரிந்து கட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டனர். அவர்களது முயற்சியால் உண்மை நிலையை நேரில் கண்டறியும் குழு ஒன்று பிஹாருக்கு அனுப்பப் பட்டது. அந்தக் குழுவில் என்னையும் சேர்த்து மூவர் பத்திரிகை நிருபர்கள். ஏனையோர் அரசியல்வாதிகள். அவர்களெல்லாம் எதற்காகப் பிஹாருக்கு வந்தார்கள், என்னென்ன கண்டுபிடித்தார்கள் என்பதெல்லாம் என் போன்றவர்களின் விசாரணைக்கு அப்பாற் பட்ட விஷயம். என் பணி பஞ்சத்தின் உண்மை நிலையைக் காமிராவினால் அப்பட்டமாகப் பிரதி செய்து, விளக்கவுரையுடன் எனக்குப் படியளக்கும் அமெரிக்கப் பத்திரிகைக்கு அனுப்ப வேண்டியது ஒன்றே. ஆகவே, முற்றிலும் சுயநலமான நோக்குடன், ''சுவையான நிமர்ச் செய்திகள்'' ஏதாவது பிரத்தியேகமாகக் கிடைக்கலாம் என்ற எண்ணத்தில் மற்றப் பத்திரிகைக்காரர்களை அரசியல்வாதிகளுடன் விட்டுவிட்டு, தனியாகப் பிரிந்து பயணம் செய்தேன்.

வடகிழக்கிலுள்ள முப்பத்தேழு முஸாபர்பூர்களில் ஒன்றிலிருந்து ஜீப்பில் எங்கள் பயணம் தொடங்கியது. காலியான மனைகள், பஞ்சடைந்த கண்கள், ''பசிக்கிறது'' என்ற சொல்லை உதிர்த்து யாசிக்கவும் வலிமையற்ற கரங்கள், எலும்புக் கூடுகள் என்ற வர்ணனைக்கும் கேவலமான மனித உடல்கள் இவை போகுமிடமெல்லாம் எங்களை வரவேற்கத் தவறவில்லை. சுவையற்ற பதில்கள், தகுதியற்ற புகைப்படங்கள் ஆகியவற்றின் மூட்டைதான் பெரிதாகியது. பேட்டிகள் எல்லாமே அழமாட்டாக் குறை என்றால் ''ஸ்கூப்'' எங்கிருந்து கிடைக்கும்? கர்மயோகியாய்ச் செய்திக் குறிப்புக்களையும் பிலிம் சுருள்களையும் நாள் தவறாது தலைமைக் காரியாலயத்துக்கு அனுப்பி வந்தேன்.



இந்நிலையில்தான் ''பஞ்சம் தீர்ப்பவர்'' எனப் பேர் பெற்ற அந்த மகானுபாவர் பற்றிக் கேள்வியுற்றேன். இரண்டு மாதங்களுக்கு மேலாக அன்றாடம் ஐந்நூறு பேர்களுக்கு உணவளித்து லட்சக் கணக்கான ரூபாய்களைச் செலவழித்த அவர் தமது பெயரைக் கூட வெளியிடுவதில்லை. சாலை வசதியில்லாத நடுக் காட்டில் சின்னஞ் சிறு வீடு ஒன்றில் அவர் தன்னந் தனியே வாழ்கிறார். புகழோ, விளம்பரமோ அவருக்கு முற்றிலும் பிடிக்காத விஷயம். பத்திரிகைக்காரர்களை அவர் பார்ப்பதே கிடையாது என்பதெல்லாம் கிராம வாசிகளிடமிருந்து கேட்டறிந்த செய்திகள்.

நானா இதற்கெல்லாம் மசிகிறவன்? விருதாவாக ஐந்து நாட்கள் அலைந்த பின் இதையே ஒரு ''ஸ்கூப்''பாகப் பயன்படுத்தாவிடில் என் திறமைதான் என்னவது? ஆகவே, ''முயற்சியே செய்யாமல் முடிவு கட்டுவது தவறு'' என்ற ஆவேசத்துடன், மிகவும் பணிவன்போடு அவருக்கு ஒரு கடிதம் எழுதி அவரது காரியதரிசிக்கு அனுப்பினேன். என்னைச் சந்திப்பதால் அவரது எளிமைக்கு எவ்விதமான ஊறும் விளையாது என உறுதி கூறினேன்.

மூன்று நாட்கள் கழித்து எனக்குப் பதில் கிடைத்தது. அதில் எனது உறுதிமொழிக்கு இணங்கி, அவர் எனக்குப் பேட்டியளிப்பதாகவும், ஆனால் எந்தக் காரணத்தாலும் தம்மை நேரில் பார்க்க இயலாது என்றும் கூறி யிருந்தார்.

பேட்டி அளிப்பாராம், ஆனால் நேரில் பார்க்க முடியாதாம், இதன் பொருள்தான் என்ன? மனம் தளராமல் குறிப்பிட்ட நாளன்று அவரைக் காணச் சென்றேன்.

பங்குனியின் படை பதைக்கிற வெய்யிலிலும் கூடப் பூமியில் விழாத வண்ணம் நிழல் தரும் மரங்கள் அடர்ந்த கானகத்தின் நடுவே, மிக அமைதியான சூழ்நிலையில், கம்பீரமாக நின்றது அந்தப் பழைய காலத்து வீடு. சுற்றிலுமுள்ள சிறிய செடி கொடிகள் அனைத்தும் கதிரவனின் கொடுமைக்கு ஈடு கொடுக்க முடியாமல் காய்ந்து கருகி மடிந்து விட்ட போதிலும் நூறு ஆண்டுகளைத் தாண்டிய மரங்கள் மாத்திரம் கதிரவனுக்குச் சவால் விடுபவை போன்று வான் முகட்டை எட்டி நின்றன. இயற்கையே தோற்றுவித்த வறட்சியை எதிர்த்து நிற்கும் சக்தியை, இயற்கையின் தயவிலேயே வாழும் அம்மரங்களுக்குத் தந்த இறைவனை எண்ணி வியந்தேன். அவ்வீட்டின் நாதாங்கி திறக்கப்பட்டதால் உண்டான ஓசை சிந்தனையைக் கலைத்தது.

என்னை உள்ளே அழைத்துச் சென்ற முதியவர் தம்மை அந்தத் தனவந்தரின் காரியதரிசி என்று அறிமுகம் செய்து கொண்டார். நெடுந்தூரம் பயணம் செய்த களைப்பு அவர் தந்த உயர்ந்த பழங்களாலும் இனிய பானத்தாலும் நீங்கியது.

''நீங்கள் தமிழர் என்று தோன்றுகிறது. உங்களுக்குப் பிரச்னை இராது. சாஹப் நன்றாக ஆங்கிலம் பேசுவார். தமிழ் நாட்டவரின் ஆங்கிலப் புலமை அவருக்கு ரொம்பப் பிடிக்கும்!'' — முதியவர் பேசினார்.

''நிஜமாகவா? அப்படியானால் நான் அதிருஷ்டசாலி!'' என்றேன் நான்.

''ஆனால் ஒரு விஷயம். சாஹபின் உடல் நிலை நன்றாக இல்லை. அவர் சளைக்காமல் பேச விரும்புவார். இருந்தாலும் நீங்கள் பேட்டியை அரை மணி நேரத்தில் முடிப்பது நலம். கடிதத்தில் சொன்ன மற்ற விதிகளும் நினைவில் இருக்கட்டும்'' என்று கூறி எங்களை மற்றோர் அறைக்கு இட்டுச் சென்றார். அறையை இரண்டாகப் பிரித்துக் கொண்டு வண்ணத் திரை ஒன்று தொங்கியது.

முதியவர் ஒரு முறை உள்ளே போய் வந்தார். பின்னர் அவ்விடம் விட்டு அகன்றார்.

''வாருங்கள், வணக்கம்!''

எதிர்பாராத சமயத்தில் கணீரென்று திரைக்குப் பின்னாலிருந்து வந்த குரல் என்னைத் திகைப்படையச் செய்தது.

சுதாரித்துக் கொண்டு பதிலுக்கு வணக்கம் கூறினேன்.

''மிகவும் மரியாதையுடனும் அழகாகவும் எழுதப்பட்ட உங்கள் கடிதம் என்னைப் பெரிதும் கவர்ந்தது. பொதுஜனத் தொடர்புக்கென்று நீங்கள் மரியாதைப் பண்போடு எழுதவில்லை, இயல்பாகவே நன்றாக எழுதுவீர்கள் என்று எனக்குத் தெரியும். நான் தான் வாரம் தவறாமல் உங்கள் கட்டுரைகளைப் படிக்கிறேனே! மிக உயர்ந்த எழுத்து!''

''உண்மையாகவா? மிக்க மகிழ்ச்சி!''

நானே என்னைப் பிரமிப்புடன் ஒரு முறை பார்த்துக் கொண்டேன். காரசாரமான எனது விமரிசனங்களுக்கு இந்த நாட்டில் கிடைக்கும் மிகச் சில பாராட்டுதல்களில் இது ஒன்றல்லவா?

''உங்களை நேரில் பார்க்க முடிந்து, நெஞ்சாரப் பாராட்டும் அளவுக்கு என் உடல் நிலை சரியாக இல்லாமல், திரை மறைவிலிருந்தே பேச நேர்ந்ததற்காக வருந்துகிறேன். உங்களுடைய காலம் விரயமாகாமல், கேள்விகள் ஏதாவது வேண்டுமென்றால் கேட்கலாம். ஆனால் தயவுசெய்து அவற்றில் ஒன்றையும் பிரசுரிக்காதீர்கள்!''

''நீங்கள் கவலையே படவேண்டாம்'' என்று உறுதிமொழி அளித்துவிட்டு, ''ஊரெல்லாம் பஞ்சமென்ற பேச்சு ஒருபுறமிருக்க, உங்களால் மட்டும் எப்படிப் பெருமளவு உணவு வழங்க முடிகிறது?'' என்று பேட்டியைத் தொடங்கினேன்.

அவர் வார்த்தை வார்த்தையாக விடை சொன்னார். அவரது குரலில் உணர்ச்சி மிகுந்திருந்தது. ''பிற நாடுகளெல்லாம் உணவு தந்து உதவும்போது, நான் மாத்திரம் தானியத்தைக் குவித்து வைத்து என்ன செய்வது? குறைந்த விலைக்குத் தந்தாலும் அதை வாங்கக்கூட யாரிடமும் பணமில்லை. ஆகவேதான் கடந்த காலப் பாபங்களுக்குப் பிராயச்சித்தமாகவும் போகிற வழிக்குப் புண்ணியமாகவும் இருக்கட்டுமே என்று தானமாகவே வழங்கி விட்டேன். உபநிஷதங்களின் வழியை ஒருசில நாட்களாவது பின்பற்றினேம் என்ற நிம்மதியுடன் உயிர் விடலாமல்லவா?''

''நல்ல கருத்தோடு தரும சிந்தையும் சேர்ந்து கொண்டது சிலாக்கியமே! ஆனால்

'கடந்த காலம்', 'பிராயச்சித்தம்' என்று ஏதோ சொன்னீர்களே, அவற்றின் தாத்பர்யம் என்ன?''

''நீங்கள் சரியான பத்திரிகைக்காரர், ஐயா! இசைகேடாக மாட்டிக் கொண்டால் ஒன்று விடாமல் கறந்து விடுவீர்கள் போல் இருக்கிறதே!''

''அப்படியெல்லாம் இல்லே! உங்களுக்குச் சிரமமில்லே என்றால், அதுவும் நீங்களாக விரும்பினால் சொல்லுங்கள்!''

''சிரமம் என்பது இனிமேல்தான் ஏற்பட வேண்டுமா என்ன? அதுதான் பதினைந்து ஆண்டுகளாக நான் தவறாமல் என்னைச் சித்திரவதை செய்து வருகிறதே!'' என்றவர் சில விநாடி மௌனத்துக்குப் பிறகு தாமாகவே சொல்லலானார்.

## கோபுரமும் புகைக் கூண்டும்

ராஜாஜி கவர்னர் ஜெனரலாக இருக்கையில் ஒருமுறை கூறியதாவது: ''நான் வகிக்கும் கவர்னர் ஜெனரல் பதவியானது ஆலயங்களில் உள்ள முன் வாசல் கோபுரத்தைப் போன்றது. கோபுரத்துக்கு வேலை ஒன்றும் கிடையாது. இதைவிட நான், வீடுகளிலோ, ஆலைகளிலோ உள்ள புகைக்கூண்டாக இருக்கவே விரும்புகிறேன். உள்ளே அண்டையும் புகையை மேலே கொண்டு போய்விடும் காரியத்தைப் புகைக் கூண்டு செய்கிறதல்லவா?''

பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு ஒரு முறை பிஹாரில் ஏறக்குறைய இன்றுள்ள நிலை சில காலம் நிலவியது. சிறிதும் மழையே இல்லாததால் கிணறுகள் வறண்டு போயின. எங்கும் பஞ்சக் கோலம் தாண்டவமாடியது. அப்போதுதான் நவபங்கா ஜமீன்தார் காலமாகியிருந்தார். சொத்துக்களை நிர்வகிக்கும் பொருட்டு, கல்கத்தாவில் இருந்த பெரிய ஆலை ஒன்றை விட்டுவிட்டு ஊருக்குத் திரும்பியிருந்தார் அவரது புதல்வர். தொழில் துறையில் எப்போதுமே விஞ்ஞான ரீதியில் செயல்பட்டுப் பழகிய அவரது எண்ணமெல்லாம் விவசாயத்திலும் கூட அதே முறைகளைப் புகுத்துவதில் முனைந்தது. அவரது முயற்சி பலன் தராமல் போகவில்லை. மூன்றாண்டுகளில் விளைச்சல் புதிய சாதனைகளைத் தோற்றுவித்தது. ஆனால் முற்றிலும் இயந்திரங்களையே அவர் பயன்படுத்தியதால் பெருவாரியான விவசாயிகளுக்கு வேலை இல்லாமல் போய்விட்டது. சுமார் இருபது மைல் சுற்றளவுக்கு இளைய ஜமீன்தாரைத் தவிர வேறு நிலச்சுவான்தாரோ அல்லது அவரது ஒருசில நம்பகமான ஊழியர்களைத் தவிர வேறு மனிதர்களோ கிடையாது. ஒரு நாள் திடீரென்று அக்கம் பக்கத்துக் கிராமங்களிலுள்ள ஜனங்களெல்லாம் அவரது பண்ணையைச் சூறையாட முயன்றனர். இளையவர் சுவிரக்கமில்லாமல் துப்பாக்கியைக் காட்டி அவர்களை விரட்டி விட்டார். அவருடைய அந்தரங்க வேலைக்காரர்கள் கூட அவரை வெறுத்தனர். அதன் காரணமாக ஊரை விட்டே விரட்டி அடிக்கப்பட்டனர். எஞ்சிய ஒருசிலர் இளையவரின் தயவை நாடிப் பணிந்தனர்.

பஞ்சம் மாத்திரம் தன் கொடிய பிடியினின்றும் ஒருசிலரைப் பிரித்து ஒதுக்கி விடுமா என்ன? அவரது நம்பிக்கைக்குரிய வேலைக்காரர்களும் பசியின் கொடுமைக்காளாயினர். தமது சொந்த நலனைக் கருதிச் சில நாட்கள் உணவு வழங்கிய இளையவர், பின்னர் அதையும் நிறுத்தி விட்டார்.

அவரது இந்தச் சுயநல மனப்பான்மைக்குப் பலியானவர்களில் கனசியாமும் ஒருவன். மூன்று தலைமுறையாகப் பண்ணையின் விவகாரங்களைக் கவனித்து வந்த உண்மையான வேலைக்காரக் குடும்பம் அவனுடையது. மனைவியை இழந்த அவன் தன்னுடைய ஒரே மகள் சாரதாவுடன் அந்தப் பண்ணையிலேயே வாழ்ந்து வந்தவன். சாரதா இளமையில் துள்ளிய கட்டழகி. இளையவருக்கு அவளிடம் சற்று ஈடுபாடு. காதல் என்று கூடச் சொல்லலாம். வேலைக்காரன் மகளாக இருந்திராவிட்டால் அவளை ஒரு வேளை அவர் மணந்திருக்கக் கூடும். ஆனால் மிதமிஞ்சிய சுயநலமும் வர்க்க வேறுபாடுகளுமாக அவளை வேலைக்காரியாகவே மதிக்கும் எண்ணத்தை அவரிடமிருந்து அகற்றவில்லை. அவரது மிருக இச்சைகளுக்கு ஈடு கொடுக்கும்வரை அவளை இரகசியமாகப் பேணினார். பெற்றவன் பட்டினியால் சாகும் போது, மகள் மாத்திரம் தன் வயிற்றைப் பார்த்துக் கொள்வாளா என்ன? அவனுக்கும் உணவு தருமாறு இளையவரைத் தூண்டினாள். அவரும் மேலுக்கு இசைந்தார்.

அவரது சம்மதமும் அர்த்தமற்றதல்ல! ஏராளமான புரதச் சத்துள்ள காட்டுச் சாமையை அவர் கனசியாமுக்குத் தந்தார். கால்நடைகளுக்குக் காட்டுச் சாமைச் சோறு நாலு கவளமும் இரண்டு பூண்டு கொல்லாங் கிழங்குமாகச் சேர்த்து ஊட்டினால் பளு இழுக்கும் சக்தி அதிகமாகும். ஆனால் அதிலே பத்தில் ஒரு பங்கை மனிதன் சாப்பிட்டாலும் சீதபேதி கண்டுவிடும். கொழுப்புச் சத்தில்லாமல் புரதத்தை ஜீரணிப்பது மனித உடலுக்கு இயலாத காரியம். இந்த விஞ்ஞானமெல்லாம் குடியானவர்களுக்கு எங்கே தெரிகிறது? பசி வந்திடில் பத்தும் பறந்திட, கையில் கிடைத்ததை வயிற்றுக்குள் தள்ளிவிடும் ஒரே தன்மைதான் மிஞ்சி நின்றது. மாடுகளுக்குத் தரும் பழக்க வாசனையில் கனசியாமும் சாமைச் சோற்றைத் தின்றான். காலையில் கடுமையான பேதி கண்டு இறந்தான்.

எஜமானர் என்ற முறையில் யாருமே இளையவரை ஏதும் தட்டிப் பேச இயலவில்லை. அவரும் எவ்விதமான பரபரப்பையும் காட்டிக் கொள்ளாமல் கனசியாமின் ஈமக்கிரியைகளைச் செய்து முடித்தார்.

இடுகாட்டிலிருந்து திரும்பியதும் அவரது வீட்டு வாசலில் அவர் கண்ட காட்சி அவரைத் திடுக்கிட வைத்தது.

சாரதா தலைவிரி கோலமாகத் தனக்குள் பேசிச் சிரித்தபடியே எதையோ மென்று

கொண்டிருந்தாள். அருகில் சென்று கவனித்தார்.

''கொல்லாங் கிழங்கு உனக்கும் வேண்டுமா?'' சாரதா பைத்தியம் பிடித்தவள் போல் கடகடவென்று சிரித்தாள்.

''அடி பாவி... அது கொடிய விஷம்! முதலில் அதைத் தூர எறி!'' — இளையவர் இரைந்தார்.

''விஷமா...எவ்வளவு இனிப்பாக இருக்கு தெரியுமா?''

ஒரே எட்டில் தாவி, அவள் கையைப் பிடித்தார், கிழங்கைப் பறிக்கும் முயற்சியில். அவள் திமிறி ஓடினாள்.

பத்தடி தூரத்தில் போய் நின்று கொண்டாள். மீண்டும் அதே பேய்ச் சிரிப்பு.

''எறியப் போகிறாயா இல்லையா?'' — இளையவர் திரும்பவும் கட்டளையிட்டார்.

''இந்தா, பிடிச்சுக்கோ!''

தன் பலம் கொண்ட மட்டும் அதை வீசி எறிந்தாள். கிழங்கு நேராக வந்து இளையவரின் உதட்டைத் தாக்கியது.

சாரதா காட்டுக்குள் ஓடி விட்டாள். இளையவர் வெறுப்புடன் கிழங்குத் துண்டை உற்று நோக்கினார்.

திடீரென்று அவரது உதட்டில் இனிக்கும் உணர்வு தோன்றியது. நாவால் மேலுதட்டைத் தடவினார். இனிப்பு அதிகரித்தது. கிழங்கு அவரை ஆகர்ஷித்தது.

விஞ்ஞான அறிவு புலன் உணர்ச்சிகளுக்கு முன்பு மங்கி மடிந்து போயிற்று. அவள் எறிந்துவிட்டுப் போன கிழங்குத் துண்டை எடுத்துக் கடித்தார். அதன் ருசி அவரை ஆட்கொண்டது.

மறுநாள் காலை. படுக்கையை விட்டு எழுந்தது முதலே அவர் உடம்பெல்லாம் ஒரே எரிச்சல். உதட்டில் ஏதோ உணர் விழந்தது போன்ற ஒரு பிரமை. எழுந்து, எதிரில் நின்ற நிலைக்கண்ணாடியில் உற்று நோக்கினார். உதட்டைச் சுற்றிலும் எச்சில் பற்று போன்ற மூன்று பெரிய கரிய வட்டங்கள் அவரைப் பயமுறுத்தின. உதட்டில் மீண்டும் கிழங்கின் ருசி!

மெல்ல எழுந்து போய்க் கனியாயின் குடிசைக்குள் நுழைந்தார். சாரதாவைக் காணவில்லை. அங்குமிங்கும் தட்டித் தடவி வேறு ஒரு கிழங்கை எடுத்துத் தின்றார். இதுவரையில் கண்டிராத ஓர் அபூர்வமான தின்பண்டம்போல் அது தோன்றியது.

அவர் காட்டுத் தினையை விதைத்தார். அது ஊழ்வினையாக அவரை ஆட்கொண்டு விட்டது.

அவர் வீட்டுக்குத் திரும்பியதும் அவரது காரியஸ்தர் காத்திருந்தார். எஜமானரின் முகத்தில் கண்ட மாறுதல்கள் அவரை அதிர்ச்சிக்குள்ளாக்கின. அவர் அனுபவசாலி. விஷயத்தை உடனே புரிந்துகொண்டார். விஷ முறிவு வைத்தியம் செய்விக்கப்பட்டது. ஆனால் சிகிச்சை முடியுமுன்னரே விஷம் அவரது உடலின் பெரும் பகுதியை ரணமாக்கி விகாரப்படுத்தி விட்டது. மருந்துகளும் பச்சிலைகளும் அவரைச் சாவினின்றும் காத்தனவே யன்றி அவரது உடலின் சீர்கேட்டைத் தணிக்கவில்லை.

மீண்டும் அவருக்குச் சாரதாவின் நினைவு வந்தபோது அவள் மறைந்த செதியைக் கூறினார் காரியஸ்தர்.. அவரது துயரத்துக்கு எல்லையே இல்லாமல் போய்விட்டது. எல்லையற்ற சுயநலமும் பிறர்க்குதவா மனப்பான்மையும் படைத்த அவர் வாழ்வோ, விஞ்ஞான அறிவோ, ஆஸ்திகளோ பயனற்றவை என்பதை உணர்ந்தார். தமது நிலத்தையெல்லாம் குத்தகைக்கு விட்டுவிட்டு, காட்டின் நடுவேயுள்ள சிறு வீடொன்றில் குடிபுகுந்து சன்னியாச வாழ்வு வாழலானார். தாம் விதைத்த வினையின் பயனைப் பரந்த உலகத்தை நிமிர்ந்து பார்க்கவே அவர் கூசினார். ஆனால் தமது பழைய பாபங்களுக்குப் பிராயச்சித்தமாக அவர் தேடிய மாற்றுத்தான் பஞ்ச நிவாரணமும் தான தருமங்களும்!

இளைய ஜமீன்தார் பெருமூச்சுடன் கதையை முடித்தார். தன்னை உணர்ந்த அம்மனிதரை நேரில் காணும் ஆசை என்னுள் கிளர்ந்தது. நான் என் ஆசையை வெளியிட்டேன்.

''ஐயையோ, தயவுசெய்து அந்த முயற்சியைக் கைவிட்டு விடுங்கள்! ரூனியக்காரனை யாராவது பார்க்க விரும்புவார்களா? தவிரவும் எனது விகாரம் உங்கள் ஆயுள் முழுதும் நீங்காத பயங்கரத்தை ஏற்படுத்தி விடும். அந்த நிலை உங்களுக்கு வேண்டாம், ஐயா, நீங்கள் புறப்படலாம்.''

அடுத்து என்னிடமிருந்து கேள்வி ஏதும் பிறக்கு முன் கதவுகள் திறந்து அடைக்கப்பட்டன. அவர் வீட்டினுள் சென்றுவிட்டார்.

அன்று மாலை நாங்கள் அவ்வூரை விட்டுப் புறப்படும் முன் சற்றும் எதிர்பாராத செய்தியொன்று எங்களுக்கு எட்டியது.

அந்தத் தருமவான் இறந்து விட்டார்!

பழகியதென்னவோ சிறிது நேரமே என்றாலும் அவரது ஈமச்சடங்கில் கலந்து கொள்வது ஒரு கடமை எனக் கருதினேன். சிதையிலிடுமுன் அவரது முகத்தையும் உடலையும் ஆழ்ந்து கவனித்தேன். அவர் கூறியதிலிருந்து நான் ஊகித்த கரிய நிற வடுக்களோ பஞ்சு போன்ற உதிரும் உடலையோ நான் காணவில்லை. சாதாரண மனித உடம்பையே நான் கண்டேன். அவரது பிராயச்சித்தமே அவரது பாபங்களைக் கழுவி அவர் உடலைப் புனிதமாக்கி விட்டதோ என்று எண்ணிப் புளகித்தேன்.

ஆனால் மீண்டும் காரியஸ்தரைத் தனியாகக் கண்டு விசாரித்ததில் நான் குறிப்பிடும் வடுக்களையோ பஞ்சு உடலையோ தாம் கண்டதோ, கேள்வியுற்றதோ இடையாது எனக் கூறினார்.

''அப்படியானால் சாரதா என்ற பெண்..?''

''சாரதாவாவது, பெண்ணாவது? எங்கள் எஜமானர் பெயர்தான் சாரதாநாத் பிஹாரி என்பார்கள்!''

அதிபுத்திசாலி நிருபர் என்று அமெரிக்கர்களிடம் பெயர் வாங்கிய நானே ஒரு கதைக்கு ஏமாறி விட்டேனோ?

## அத்தியாயம் 19

# யாரோ இவர் யாரோ 2

ஷோர்

சின்னதுரை ரவியையும் தணிகாசலத்தையும் சந்தித்துவிட்டுச் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் முத்து அங்கு வந்து சேர்ந்தான்.

முத்து ராஜரத்தினம் வீட்டில் என்ன வேலையில் இருக்கிறுன் என்று தணிகாசலம் விசாரிக்க ஆரம்பித்தார். முத்து உளற ஆரம்பித்தான். தணிகாசலத்துக்கு மெள்ள மெள்ள விஷயம் விளங்கியது. முத்து, டாக்டர் மேகநாதன் என்கிற போர்வையைப் போர்த்திக் கொண்டு ராஜரத்தினம் வீட்டில் வளைய வருகிறுன் என்பதைப் புரிந்து கொண்டார். ஆனுல் எதற்காக இந்த வேஷம் என்பது தெளிவாகத் தெரியவில்லை.

''எலே! எதுக்காகடா நீ குடுமியை வெட்டிக்கிட்டே?'' எல்லாவற்றுக்கும் மேலாக, அந்த அடாத செயலுக்குக் காரணத்தைத் தெரிந்து கொள்ளாமல் விடுவதில்லை என்று அந்தக் கேள்வியைக் கேட்டார் தணிகாசலம்.

''குடுமியை வெச்சுக்கிட்டுப் போனு, யாராவது டாக்டர்னு நம்புவாங்களா?'' என்று இடைமறித்தான் ரவி.

''எதுக்காகடா, டாக்டர் வேஷம் போட்டே?'' என்ருர் தணிகாசலம்.

ரவி விளக்கிறன். ''ஸார்! வேஷம் போடறதுன்னு என்னவோ தீர்மானம் செய்தாச்சு. அதைக் கம்பௌண்டர் வேஷமா போடுவானேன்? கௌரவமா டாக்டர் வேஷமாவே இருக்கட்டும்னு தான், இப்படிச் செய்துட்டான்.''

''எளவு, ஒண்ணும் புரியலே!''

''ஸார்! காதலைப் பத்தி உங்களுக்கு எப்படிப் புரியும்?''

''காதலா? என்னப்பா ரவி, சம்பந்தமில்லாமப் பேசறே? எங்கேயிருந்தோ எங்கிட்டோ தாவறே! இப்படித் தாவித் தாவிப் பேசாதே! டாக்டருக்கும் காதலுக்கும் என்னய்யா சம்பந்தம்?''

''ஸார்! உங்களுக்கு எத்தனை வயசுலே கல்யாணம் ஆச்சு?''

''பதினெட்டு இருக்கும்.''

''முத்துவுக்கு இப்ப என்ன வயசு?''

''இருபத்திரண்டு இருக்கும்.''

''அவனுக்கு நீங்க ஏன் இன்னும் கல்யாணம் செய்யலே? அதனுலே அவனு ஒரு பெண்ணைத் தேடிக்கிட்டான்.''

''என்னது? என் மவன் காதல் பண்ணி விட்டானு!'' தணிகாசலம் போட்ட கூச்சலைக் கேட்டு ரவியே சிறிது பயந்து விட்டான். முத்துவோ நடுநடுங்கி அடுத்து என்ன நேருமோ என்று மிகுந்த பயத்தோடு நின்ருன். தணிகாசலம் முத்துவையே விழித்துப் பார்த்தார்.

''முத்து காதல் பண்ணிப்பிட்டானு! நம்ப முடியலேயே!'' ரவியும் முத்துவும் பேசாமல் நின்ருர்கள்.

''எலே முத்து! மவனே! நீயாடா காதல் பண்ணிட்டே! உன்னைப் போய் எப்படிரா ஒருத்தி காதலிச்சுப்பிட்டா! என் மவனைக்கூட ஒரு பொண்ணு காத

## இரு கரைகளும் வேண்டும்

ஆற்றில் பிரவாகம் எடுத்து ஓடும் போது எந்தக் கரை உடைந்தாலும் ஆபத்துத்தான். முதலாளியும் தொழிலாளியும் ஆற்றின் இரு கரைகளைப் போன்றவர்கள். இருவரில் யார் முறித்துக் கொண்டாலும் தேசத்துக்கு நன்மை ஏற்படாது.

—ராஜாஜி

விக்குதா? நம்ப முடியலையே!'' அப்போதுதான் தணிகாசலத்துக்கு இந்த விஷயத்தில் கோபம் வரவில்லை; ஆச்சரியம்தான் மேலிட்டது என்பதை ரவியும் முத்துவும் உணர்ந்தார்கள்.

''அப்பா! உங்களுக்குக் கோபமா?'' என்றான் முத்து.

''சேச்சே! என் மவனைக்கூட ஒரு பொண்ணு காதலிக்குதுன்னு அதுலே எனக்குப் பெருமைதான்! நம்ம ஊர் பெரிய மணியக்காரன் மவன் காதல் பண்ணிப் பெரிய இடத்துலே கல்யாணம் பண்ணிக்கிட்டான் என்ற மெதப்புலே, அந்த மணியக்காரப் பய என்கிட்டே என்னு திமிராப் பேசினான்! ஊருக்குப் போன உடனே அவங்கிட்டே நான் பேசப்போறேன். எலே முத்து, யார்ரா, அந்தப் பொண்ணு?'' என்றார் தணிகாசலம்.

''அந்த ராஜரத்தினம் பொண்ணு தாம்பா. பேர் கிரிஜா!'' என்று பதில் அளித்தான் முத்து.

''அவ எப்படிரா உன்னைக் காதலிச்சா?'' தணிகாசலம்தான் கேட்டார். அவருக்கு இன்னமும் சந்தேகம் தீரவில்லை. ''எலே, சொல்லுடா! அது எப்படிரா உன்னைக் காதலிச்சுது?''

''எனக்கே தெரியலேப்பா!'' என்றான் முத்து.

''அந்தப் பொண்ணு பகல்லே, நல்ல வெளிச்சத்திலே உன்னைப் பார்த்திருக்குதா?''

''ஓ!'' என்று தலையாட்டினான் முத்து.

''அப்படியுமா காதலிக்குது! என்னடா இது ஆச்சரியமா இருக்குது! சரி... சரி.... அது மனசு மாறுறதுக்குள்ளே சீக்கிரம் கலியாணத்தை முடிச்சுக்கிடணும்'' என்று கூறிய தணிகாசலத்துக்குத் திடீரென்று வேறு விஷயம் நினைவுக்கு வந்தது. அவருடைய போக்கும், பேச்சும், தோரணையும் மாறியது. கோபமாக முத்துவைப் பார்த்தார்.

''ஆமாம்! எலே, இதெல்லாம் என்னடா? ஊர் பூரா உன்னாலே அஞ்சு பத்துன்னு ரவிக்குக் கடன் வந்திரிச்சாம்! ஏண்டா இப்படி?''

''என்னாலே கடனா? என்னடா இது ரவி?'' என்றான் முத்து.

பேச்சு நீண்டது. முத்துவுக்கும் கடனுக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை என்று ரவியே ஒப்புக் கொண்டான்.

''அப்படின்னா, அந்த சேட்டிக்காரன் கிட்ட உனக்கு என்னப்பா விவகாரம்?'' என்று ரவியைப் பார்த்துக் கேட்டார் தணிகாசலம்.

''அது ஏதோ சொந்த விஷயம் சார்!''

''மண்ணாங்கட்டி சொந்த விஷயம்! அப்ப என்னை உன் அப்பன்னு சொல்லி ஏன் உள்ளார இழுத்தே?''

''ஸார், இந்த வீட்டை அவன் பேருக்குப் பத்திரம் எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்திருக்கிறேன்... அதிலே எங்கப்பா கையெழுத்தையும் வாங்கிக் கொடுத்தால்தான் செல்லும். அதுக்காகத்தான் அவன் வந்தான். அதான் நீங்களே என் அப்பாவா இருந்து, ஒரு வாரத்துலே எல்லாம் முடிச்சுடலாம்னு வாக்குக் குடுத்திட்டீங்களே. ரொம்ப தாங்க்ஸ் ஸார்!''

''என்னது! இது என்னுடா எலே! என் பையனுக்கு டாக்டர் வேஷத்தைப் போட்டுப்பிட்டே! எனக்கு உங்கப்பன் வேஷத்தைப் போட்டுப்பிட்டே!.... தெருக் கூத்திலே அரிதாரம் பூச வேண்டியவன் இங்கே வந்து களுத்தறுக்கிறே! ஆமாம்! வீட்டை எளுதிக் கொடுத்துப்பிட்டியே — உன் தோப்பனுருக்குத் தெரிஞ்சா என்னுடா ஆவும்?''

''தெரியற போது அதைப் பார்த்துக்கலாம்.''

''அப்படி வீட்டை எளுதும்படியா உனக்கு என்ன கடன்? மரியாதையாச் சொல்லு!'' என்று உரிமையோடு கேட்டார் தணிகாசலம்.

''அடி, சக்கை! ஏன் ஸார், போனாப் போறதுன்னு எங்கப்பாவா நடிக்க 'சான்ஸ்' கொடுத்தால் நிஜமாவே அப்பான்னு நினைச்சுக்கிட்டீங்களா! மிரட்டறீங்களே!''

''அட, சொல்லுப்பா!''

''அது சொந்த விஷயம், ஸார்!''

''எல்லாம் கடன்! இதுலே என்னுடா சொந்தம்? அது போகட்டும். ரெண்டாவது வந்தாரே ஒருத்தர், சின்னதுரை — அவர்கிட்ட என்ன கடன்?''

''அவர்கிட்டே கடன் இல்லே'' என்று ஆரம்பித்து ரவி, சின்னதுரைக்கும் தனது தகப்பனார் கனகசபைக்கும் ஏற்பட்ட மனஸ்தாபத்திலிருந்து, சித்ராவுக்கும் தனக்கும் ஏற்

# பருத்தியில் பல அற்புதங்கள்

பாப்லின்கள்
ஷர்ட்டிங்குகள்: ஸ்ட்ரைப், டாப்பி, செக், பைஜாமா
வேஷ்கள்: ப்ளாடினம், ராஜா ஸ்பெஷல்
மெர்஼ிரைஸ்ட் லான்: 5531
சூட்டிங்குகள்: காபர்டீன்
ப்ரின்டுகள்: ப்ரின்டெட் லான்கள், வாயில்கள், பாப்லின்கள்
நெசவுசெய்த கலர் புட்டாக்கள்:
லெனோ மற்றும் புட்டாக்களில்
2x2 ஃபென்ஸி ஃபுல் வாயில்கள்




·SANFORIZED·

TEBILIZED* and
TEBILIZED Double Tested
*REGISTERED USERS

அரவிந்த் மில்ஸ் லிமிடெட்
அகமதாபாத்

---

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்:
மெஸ்ர்ஸ் அஜித்பாய் ஜயந்திலால் சோமாபாய் படேல் & கோ 5, கிடங்குத் தெரு, மதராஸ்

பட்ட காதல் உட்படச் சகல விஷயங்களையும் கூறி முடித்தான். தனது கல்யாணத்தை முடித்து வைக்கவே தனிகாசலத்தைத் தன் தகப்பனாராக, சின்னதுரையிடம் அறிமுகப்படுத்தி வைத்ததையும் கூறினான்.

தனிகாசலம் எல்லாவற்றையும் கேட்டு அப்படியே பிரமித்து நின்றார். ரவியைப் பார்த்தார். 'யார் இவன்? பணத்தைத் தாராளமாகச் செலவு செய்யும் இந்திர தேவனா? பரம ஏழையாகிக் கடலிலே சிக்கித் தவிக்கும் குசேலரா? பிருந்தாவனத்தில் கோபிகளோடு விளையாடும் கண்ண பரமாத்மாவா? இஷ்டம்போல் டாக்டர்களையும் அப்பாக்களையும் படைக்கும் பிரும்மதேவனா? யார் இவன்?' என்று புரியாமல் வியந்து நின்றார். பிரமையிலிருந்து விடுபட்டு, ''அப்பா, ரவி! இப்படிக் கணக்கே இல்லாமல் பொய்களாகச் சொல்லியிருக்கிறாயே — இது நியாயமா?'' என்று கேட்டார்.

''என்ன ஸார் தப்பு? ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணத்தைப் பண்ணுன்னு பெரியவங்களே சொல்லியிருக்கிறாங்களே!''

''நீ சொல்லியிருக்கிற பொய்யெல்லாம் வெச்சுக்கிட்டு மெட்றாஸ்லே இருக்கிற அத்தனை பிரம்மச்சாரிகளுக்கும் கல்யாணம் செய்துவிட்டு மிச்சம் மீதி இருக்கிற பொய்யை வெளியூர் கல்யாணங்களுக்குப் 'பார்ஸல்' பண்ணலாம் போலிருக்குதே!''

''ஸார்! இது எப்படியிருந்தால் என்ன? சின்னதுரைக்கு நான் கனகசபை மகன்னு தெரிஞ்சால், அவர் வீட்டு வாசற்படியை நான் மிதிக்க முடியாது. சித்ராவை நான் மறந்துவிட வேண்டியதுதான். அதிருஷ்டவசமா இப்போ அவர் நான் உங்க



மகன்னு நினைச்சுக்கிட்டிருக்கார். அதனாலே நீங்கதான் என் அப்பாவா இருந்து என் கல்யாணத்தை நடத்தி வைக்கணும்'' என்றான் ரவி.

தணிகாசலத்துக்குத் தூக்கிவாரிப் போட்டது.

''என்னாது? என்னாது? என்னாது?'' என்று சொல்லிச் சந்தேகத்துக்கு 'என்னாதுன்னேன்?'' என்று கேட்டு முடித்தார்.

'' ஒண்ணுமில்லே, ஸார்! என் கல்யாணத்தை முடிக்கிற வரைக்கும் அப்பாவா இருங்க. போதும். கல்யாணம் முடிஞ்ச பிறகு சின்னதுரையாலே என்ன செய்ய முடியும்? நான் கவனிச்சுக்கிறேன்.''

''எலே! என்ன விளையாடறியா? கடன்காரன் கிட்டே நடிக்கச் சொன்னே சரி! கல்யாணப் பந்தலிலேயே பொய் சொல்லச் சொல்றியா? நான் மாட்டேன். எல்லாம் சின்னப்புள்ளை வெவகாரமா இல்லே இருக்குது!'' என்றார் தணிகாசலம்.



''ஸார்! இந்தக் கல்யாணத்தை நீங்க முடிச்சுக் கொடுத்தா ரெண்டு குடும்பத்தை ஒண்ணுசேர்த்த பெருமை உங்களைத் தேடி வரும் ஸார்!''

''எனக்கு அந்தப் பெருமை வேண்டாம். நீ என்ன சொன்னாலும் சரி, இந்த மாதிரி வெவகாரங்களிலே நான் தலையிட மாட்டேன். இப்பவே போய்ச் சின்னதுரைகிட்டே, நீ யாரு என்னுங்கிறதைச் சொல்லிப் போடறேன். இல்லாப்புட்டா அப்பாலே எனக்குப் பொல்லாப்பு வந்துடும்.''

ரவி தணிகாசலத்தை நிமிர்ந்து நோக்கினான். ''சரி, வாங்க ஸார்!'' என்றான் ஒரு தீர்மானத்துக்கு வந்தவனாக.

''எங்கே?'' என்றார் தணிகாசலம்.

''நானும் கொஞ்சம் வெளியே போகணும். போகிற வழியிலே உங்களைச் சின்னதுரை வீட்டுலே விட்டுடறேன். நீங்க சொல்ல வேண்டியதைச் சொல்லிக்குங்க.''

''நீ எங்கே போறே?''

''போலீஸ் ஸ்டேஷனுக்குத்தான். உங்க மகன் முத்து, டாக்டர் மேகநாதன்னு சொல்லிக்கிட்டு ராஜரத்தினம் வீட்டிலே ஆள்மாறாட்டம் செய்திருக்கிறானே. அதைப் போலீஸிலே சொல்ல வேண்டாமா? அவனுக்கு ஒரு அஞ்சாறு வருஷமாவது கிடைக்கும். சரி.... வாங்க, போகலாம்!''

தணிகாசலம் விழித்தார். ''என்னப்பா சொல்றே?''

''ஸார்! நான் தீர்மானமாச் சொல்றேன். நான் சொல்றபடி நடிச்சு, நீங்க என் கல்யாணத்துக்கு உதவி செஞ்சா சரி. இல்லேன்னா உங்க மகன் ஆள் மாறாட்டம் செய்ததை நேரே போலீஸிலேயே போய்ச் சொல்லி விடுவேன். கண்டிப்பா ஜெயில்லே தள்ளுவாங்க. உங்க ஊரிலே பெரிய மணியக்காரன்கிட்டே நீங்க தலைநிமிர்ந்து பேசலாம். உங்க மானம், மரியாதை, கௌரவம் உங்க ஊரிலே கொடி கட்டிப்பறக்கும்!''

தணிகாசலம் ரவியின் காலில் விழாத குறையாக, ''அந்த மாதிரியெல்லாம் செய்யாதேப்பா!'' என்று கெஞ்சினார்.

''வேறே வழியில்லே!'' என்று அவரிடம் கூறிவிட்டு ரவி முத்துவைப் பார்த்து, ''மன்னிச்சுக்கோ முத்து. ஐ ஆம் ஸாரி.... உனக்கு ஜெயில்லே 'ஏ' கிளாஸ் வாங்கித்தர நான் ஏற்பாடு செய்யறேன்'' என்றான்.

முத்து 'ஓ'வென்று அலறினான்.

''அப்பா! நீ ரவிக்கே அப்பாவா இருப்பா! என்னை ஜெயிலுக்கே அனுப்பாதேப்பா! ரவி, ஜெயில்லே என்னையா செய்வாங்க? சொல்லு! உனக்கு எல்லாம் தெரிஞ்சிருக்குமே! அய்யோ! ஜெயில்!'' என்று புலம்பினான் முத்து.

தணிகாசலம் ரவியைப் பார்த்து, ''அப்பா ரவி, நீ சொல்றபடி நான் செய்யறேன். என் மானத்தை வாங்கிப் புடாதே!'' என்று கூறி அவன் கையைப் பிடித்துக் கொண்டார்.

ரவி, ''ஸார்! இப்பவே என்னோடே புறப்படணும். நேரே சின்னதுரை வீட்டுக்குப் போகணும். அங்கே போய், அவர் மகளுக்கும், எனக்கும் கல்யாணம் செய்ய ஆட்சேபணையே இல்லேன்னு நீங்க சொல்லிவிடணும். சீக்கிரம் முகூர்த்தத்தையும் நிச்சயம் செய்யச் சொல்லணும்'' என்று உத்தரவுகள் போட்டான்.

''இன்னும் என்ன செய்யணும், சொல்லு. செய்யறேன். கல்யாணத்திலே தவுல் அடிக்கணுமா? சொல்லு, அடிக்கிறேன்.''

''சரி... சரி.. சீக்கிரம் புறப்படலாம்'' என்று அவரை அவசரப்படுத்தினான் ரவி. ''முத்துவை என் சிநேகிதன்னு சொல்லிக்கிறேன். அவனும் நம்மகூட வரட்டும். மறக்காதீங்க. சின்னதுரை வீட்டிலே நான்தான் உங்க மகன். முத்து என் சிநேகிதன்.''

''இப்படி ஒரு பிள்ளையை அடையறதுக்கு நான் என்ன புண்ணியம் செஞ்சேனோ? போன ஜன்மத்திலே குறைஞ்சது நூறு பசுவையாவது கொன்னிருப்பேன்னு நினைக்கிறேன். இப்ப அநுபவிக்கிறேன்!'' என்று கூறிக் கொண்டார் தணிகாசலம். அவர்கள் மூவரும் சின்னதுரை வீட்டுக்குப் புறப்பட ஆயத்தமானார்கள். **(தொடரும்)**

## போளியிலிருந்து வெல்லம்!

வடமொழியை நாம் எப்படி விலக்க முடியும்? வடமொழிச் சொற்கள் கலக்காத பழந் தமிழ் நூல் ஒன்றுகூடக் கிடையாது. எந்தப் புத்தகத்தை வேண்டுமானாலும் குறிப்பிடுங்கள். அதில் சில சம்ஸ்கிருத வார்த்தைகளையாவது எடுத்துக் காட்டுகிறேன். அப்படி எடுத்துக் காட்டும் வார்த்தைகள் எல்லாம் சுத்தத் தமிழ்ப் பதங்கள்தான் என்றும் அவை தமிழிலிருந்து வடமொழிக்குச் சென்றவை என்றும் சிலர் துணிந்து கூறுவார்கள். சம்ஸ்கிருதமே தமிழிலிருந்து வந்தது என்று கூடச் சிலர் துணிந்து கூறுவார்கள். இது போளியைப் பிசைந்து உருட்டித்தான் வெல்லம் செய்திருக்கிறார்கள் என்று சொல்வது போலிருக்கிறது.

— ராஜாஜி



## செல்வ மகள்

எங்கிருந்தோ வந்தான் அவன்; அவள் வீட்டில் இடம் வேண்டும் என்று கேட்டான். இடம் கிடைத்தது; அவள் தந்தையின் மூலம் வேலையும் கிடைத்தது. அவ்வளவுதானா? அந்நங்கையின் இதயத்திலும் இடம் கிடைத்தது. காதல் என்று வந்தவுடன் கைகலப்பு, சண்டை எல்லாம் வருகின்றன.

ஜயசங்கர் எல்லாக் கட்டங்களிலும் நன்றாய் நடித்திருக்கிறார். ஆனால் தாம் ஒரு கொலைகாரன் என்ற நிலையில்தான் அவர் நடிப்பு நன்கு உருப்பெறுகிறது.

ராஜஸ்ரீ வெறும் கவர்ச்சிப் பதுமையாய்த் தோன்றி ஓடி ஆடுவதோடு நின்றுவிடாமல், இப்படத்தில் கொஞ்சம் நடித்திருக்கிறார்.

பழகிப்போன தாயார் பாத்திரம் பண்டரி பாய்க்கு. இரவல் தாயாக நடிக்கும் அவர் மகளிடம் உரிமையோடு கண்டித்து விட்டுப் பிறகு மன்னிப்புக் கோரும்போது தம் நடிப்பின் சிறப்பை உணர்த்துகிறார்.

இப்படத்தில் இரு தந்தையர்கள்; சுந்தரராஜன் கதாநாயகனின் தந்தை வில்லன். வி. எஸ். ராகவன் கதாநாயகியின் தந்தை—சதிகாரனைப் பிடித்துப் போலீஸில் ஒப்படைத்துச் சாகஸமாக நடிக்கிறார். சுந்தரராஜன் படத்தில் மிடுக்குடன் நடித்துப் பாராட்டைப் பெறுகிறார்.

படத்தின் பெரும் பகுதி காதல் காட்சிகளிலேயே தீர்ந்து விடுகிறது. தயவு தாட்சண்யம் பாராமல் பல காதல் காட்சிகளை வெட்டி எறிந்து, திரைக்கதையின் சஸ்பென்ஸுக்கு முக்கியத்துவம் கொடுத்துப் பாடல்களின் கொடுமையையும் தவிர்த்திருந்தால் படத்துக்கு ரசிகர்களின் ஏகோபித்த பாராட்டுதல்கள் கிடைத்திருக்கும்.

சண்டைக் காட்சிகள் ஏராளம்; அமர்க்களப்படுகின்றன. வசனம் நன்றாக இருக்கிறது. படத்தின் ஆரம்பக் காட்சிகளை வெகு வேகமாக விறுவிறுப்புடன் ஓட்டியிருப்பது வரவேற்கத் தக்கது. அந்த விறுவிறுப்பு மட்டும் கடைசிவரையில் இருந்திருந்தால்!

## இருள் நிறைந்த ஆத்மா

வாலிபனான வேலாயுதனுக்கு வயதுதான் வளர்ந்திருந்தது; அந்த அளவுக்குப் புத்தி வளரவில்லை. அதன் காரணமாக அவன் வீட்டில் பூசல் வளர்ந்தது; தகப்பனுக்கு அவன் மீது வெறுப்பு வளர்ந்தது; தாயாருக்கு வேதனை வளர்ந்தது; ஆனால் அவன் தங்கை அம்முக்குட்டிக்கு மாத்திரம் அவனிடம் பாசம் வளர்ந்தது. ஊரில் எல்லாரும் அவனைப் பைத்தியம் என்றே முடிவு கட்டிவிட்ட பிறகு அம்முக்குட்டி மாத்திரம் அவனை அவ்வாறு அழைக்கவில்லை. அது ஒன்றுதான் அவனுக்குப் பரம திருப்தியைத் தந்தது. கடைசியில் அம்முக்குட்டியே அவனைப் பல பேர் முன்னிலையில் பைத்தியம் என்று அழைத்ததும் அவன் மனம் முறிந்து விட்டது. ''நான் பைத்தியம்தான். என்னைச் சங்கிலியில் பிணைத்து விடுங்கள்'' என்று வேலாயுதன் கடைசிக் காட்சியில் சொல்லும்போது கல் மனமும் கரைந்துவிடும்.

இந்தப் படத்தில் மருந்துக்குக்கூடக் காதல் காட்சியே யில்லை! வேலாயுதனாக வரும் நடிகர் பிரேம்நஸீர் தமிழ்ப்பட உலகத்துக்குப் புதியவரல்ல. ஆனால் இந்த மலையாளப் படத்தில் 'அவரா இவர்?' என்று வியக்குமளவுக்கு மிக மிக இயல்பாக நடித்திருக்கிறார். அம்முக்குட்டியாக வரும் சாரதா மட்டும் என்ன? மிகவும் உருக்கமாகவே நடிக்கிறார். மற்ற நடிகர்களும் ஒரு சிறு குறையும் வைக்கவில்லை. முத்தச்சனாக (பாட்டனார்) வரும் எம். எஸ். நம்பூதிரியின் நடிப்பு எல்லாவற்றையும் தூக்கியடிக்கிறது. சிங்கப்பூர் மாதவன் நாயராக நடிக்கும் திக்குரிசி திரைக்கதையின் திருப்பத்துக்கே மூல காரணமாக இருக்கிறார்.

கேரள நாட்டு அவிபக்த நாயர் குடும்பத்தின் சிக்கல்களையும், சிரமங்களையும் அப்படியே படம் பிடித்துக் காட்டப்படுகிறது. இயற்கையான சூழ்நிலையில் இயல்பான மனித சுபாவங்களைச் சித்திரித்துக் காட்டும் இப்படம் 1966ம் ஆண்டின் சிறந்த தேசிய சமூகப் படம் என்ற பாராட்டைப் பெற்றிருக்கிறது; பாரிஸ் பிலிம் விழாவில் காட்டத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறது. காதலும் இல்லாமல் சாதலும் இல்லாமல் மனித இயல்பைச் சித்திரித்தே படம் தயாரிக்க முடியும் என்பதை ருசுப்பிக்கும் படத்தை நாமும் வரவேற்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.



மூன்றாவது பரிசு நாவல்

## அத்தியாயம் 11

என்னதான் லட்சுமி அம்மாளுடன் பாகீரதி சுமுகமாகப் பேசி அனுப்பினாலும் அவளுக்கு அவனைப் பிடிக்கவில்லை. தன்னுடைய பிள்ளையின் தொந்தரவு பொறுக்க முடியாமல்தான் அவள் வந்திருக்கிறாள் என்பதைப் பாகீரதி தெரிந்து கொண்டாள். ஜானுவும் ராஜாவும் எத்தனை நாட்களாகப் பழகி வருகிறார்கள், ஏன் இத்தனை நாட்களாக ஜானு மறைத்து வைத்திருந்தாள் என்று ஒன்றும் அவளுக்குப் புரியவில்லை. ஆனால் ராஜாவின் விஷயத்தில் அவளுடைய பெண்ணின் மனம் எல்லைக்கு மீறி லயித்திருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ள மட்டும் அவளால் முடிந்தது. இல்லாவிட்டால் லட்சுமி அம்மாள் எதிரில் அவள் அவ்வளவு சந்தோஷத்தைக் காட்டியிருப்பானேன்?

ஜானு ஒரு காரியத்தை மனத்தில் நினைத்துவிட்டால் அவளைத் திருப்ப முடியாது என்பதும் பாகீரதி அறிந்ததுதான். பிறவியிலிருந்தே அவளுக்கு எதிலும் ஒரு முரட்டுப் பிடிவாதம் உண்டு. ராஜாவைத்தான் கலியாணம் செய்து கொள்ளுவேன் என்று ஜானு தீர்மானித்து விட்டால் யாராலும் அந்த முடிவை மாற்ற முடியாது! வயது வந்த பெண், அதுவும் சம்பாதிக்கிற பெண்ணின் மேல், அவளுடைய ஊதியத்தால் பிழைக்கிற தாயார் எவ்வளவு தூரத்துக்குத்தான் அதிகாரத்தைக் காட்ட முடியும்?

சீதா, தங்கை ஒரு கணவனைத் தேடிக் கொண்டு விட்டாள் என்பதை அறிந்ததும் திடுக்கிட்டாள். காதல் கலியாணம் கடைசி வரை இல்லற இன்பத்தை அளிக்காது என்பது அவளுடைய எண்ணம். ஆனால் ஜானுவின் விஷயத்தில் சீதா தலையிட்டுப் பிரயோசனம் இல்லை.

கமலா மட்டும் சும்மாயிராமல் ஜானுவைத் துளைக்க ஆரம்பித்தாள்.

''இவ்வளவு பெரிய லங்கிணியா நீ? சைக்கிள் உன் மேலே ஏறின போது




# மணக்கோலம்

பி.வி.ஆர்

அந்த ராஜா என்ன பண்ணினான்? உன் செருப்பைக் கையாலே தூக்கி மிகவும் பவ்யமாக உன்னிடம் கொடுத்தானா...? அப்போதுதான் உனக்குக் காதல் உணர்ச்சி உதயமாயிற்றா?'' என்று அவள் கேலியில் இறங்கினான்.

''கமலா! நீ தினம் தினம் இந்தமாதிரி ஆரம்பிச்சே, நன்னா வாங்குவே ஆமாம்...... கொஞ்சம் நாக்கை அடக்கிண்டிரு.....!''

''நம்ம வீட்டிலே காதல் மணம் செய்து கொள்ளப் போகிறாள் ஒருத்தி என்று நான் என் சிநேகிதிகளிடம் சொல்லியாகிவிட்டதே! அது சரி, ஹனிமூனுக்குக் காஷ்மீரமா இல்லை...?'' என்று இழுத்தாள்.

ஜானா கையை ஓங்கினான்.

கமலா, ''அம்மா, ஜானா அடிக்கிறான்!'' என்று கத்திக் கொண்டே வேகமாக ஓடினாள்.

அன்று இரவு சந்தானத்திடம் பேச வேண்டும் என்று தோன்றியது ஜானாவுக்கு.

''ஏன், சந்தானம் சார்! நானும் அஞ்சாறு நாளாப் பார்க்கிறேன்.... என்னைப் பார்த்தாக்கூட மூஞ்சியைத் திருப்பிக் கொள்

# விஞ்ஞானிகளின் கண்டுபிடிப்பு

## வலியை அதி வேகமாக வெளியேற்ற

# புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'

இப்பொழுது முதன்முதலாக இந்தியாவில் வழங்கப்படுகிறது

**வலிதான் எங்கள் பிரச்னை:** 'ஆஸ்ப்ரோ' ஆராய்ச்சிக் கழகத்தில் வலியைப் பற்றிய ஆராய்ச்சிகள் செய்துவரும் விஞ்ஞானிகள் வலியை வேகமாக வெளியேற்றுவதற்கான புதிய வழியைக் கண்டுபிடித்துள்ளனர்—அதுதான் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'.

**மைக்ரோஃபைன்ட் என்றால் என்ன?** புதியதொரு விசேஷமான செய்முறையின் மூலம், 'ஆஸ்ப்ரோ'வில் உள்ள வலிநிவாரணப் பொருளை மேலும் 30 மடங்கு நுணுக்கமாக்கியிருப்பதைத்தான் மைக்ரோஃபைன்ட் என்கிறோம். இப்பொழுது ஒவ்வொரு மாத்திரையிலும் இந்த வலிநிவாரணப் பொருள்களின் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக் கூறுகள் அடங்கியிருக்கின்றன. இதன் விளைவாக, முன்பைவிட இருமடங்கிற்கும் அதிகமான வலிநிவாரணச் சக்தி, மும்மடங்கு வேகமாக இயங்கி வலியைத் துரிதமாக வெளியேற்றிவிடுகிறது.

**வேகமாகச் செயல்புரிகிறது—நீடித்த பயனைத் தருகிறது:** புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'வில் உள்ள சுறுசுறுப்பாக இயங்கும் வலிநிவாரணப் பொருள், மிகவும் சுலபமாகவும், துரிதமாகவும் இரண்டறக் கலந்து உங்கள் உடலில் 5 முதல் 7 மணி நேரம் வரை தங்கியிருக்கிறது. இதனால் தான் மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' வலியை அதி வேகமாக வெளியேற்றி, நீண்ட நேரம் பயனளிக்கிறது.

**உட்கொள்ளச் சுலபமானது:** புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'வை வெறும் மாத்திரையாகவோ, தண்ணீரில் கலந்தோ, ஒரு டம்ளர் தண்ணீருடனோ அல்லது சூடான பானத்துடனோ—எப்படி வேண்டுமானாலும் சாப்பிடலாம்.

**கீழ்க்கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:** நோவு • தலைவலி • உடல் வலி • பல்வலி • மூட்டுவலி • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • ஃப்ளு • டெங்கு • தொண்டை அழற்சி.

**சாப்பிடும் அளவு:** வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொல்லப்படி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' செயல்புரியும் விதம்




ஒரு மாத்திரையிலுள்ள அணுக்கூறுகள் [illegible]. அது உங்கள் உடலில் கலப்பதற்கு அதிக நேரமாகிறது—நீங்கள் வலியிலிருந்து நிவாரணம் பெறவும் அதிக நேரம் காத்திருக்க வேண்டியிருக்கிறது.




மைக்ரோஃபைன்ட் ஆக இருப்பதனால் புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ'வின் ஒவ்வொரு மாத்திரையிலும் சுமார் 15 கோடி நுண்ணிய அணுக்கூறுகள் அடங்கியுள்ளன—எனவே, அது வேகமும் துரிதமாக இரண்டறக் கலந்து, விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

---

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதிநவீனமான வலிநிவாரணியாகும்.






புதிய

மைக்ரோஃபைன்ட்

**'ஆஸ்ப்ரோ'**

அதி வேகமாக
வலியை வெளியே
இழுத்துவிடுகிறது

நிகோலஸ் தயாரிப்பு

னுகிறீர்களே? நான் என்ன தப்பைச் செய்து விட்டேன்?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே... ஜானு!'' என்ற சந்தானம், ''நீ செய்யறது தப்புன்னு •உனக்குத் தோணுமா? நீ செய்யறதெல்லாம் 'ரைட்'டுத்தான்!'' என்றான்.

''இடக்காப் பேச வேண்டாம்...!''

''சேச்சே...! எனக்கு இடக்காப் பேசவே வராது....!''

''நான் செய்த முடிவிலே உங்களுக்குச் சந்தோஷமோ, திருப்தியோ இல்லை....''

''அதுக்காக நீ உன் முடிவை மாற்றிக் கொள்ள முடியுமா?''

''ஏன் உங்களுக்கு...'' என்று அவள் இழுத்தாள்.

''இதில் நான் ஒரு மூன்றும் மனிதன், ஜானு... பிறருடைய உரிமைகளில் தலையிட எனக்கு யோக்கியதையோ, சுதந்திரமோ கிடையாது!''

''உங்களுக்கு ராஜாவைப் பிடிக்கவில்லையென்றால், அதன் காரணம் எனக்குத் தெரியும். அன்றைக்குத்தான் சொன்னீர்களே, அவருக்கு நேர்மை போதாது என்று...அவர் திருந்தி விடுகிறதாகச் சத்தியம் பண்ணி விட்டார்.''

''அப்படியா! ரொம்ப சந்தோஷம். திருந்தினப்புறம் வந்து சொல்லு!''

'உங்களுக்கு அதிலே நம்பிக்கையில்லாவிட்டால் போறது....''

''உனக்கு இருந்தால் சரிதான்....'' என்றான் சந்தானம்.

ஜானுவுக்கு எரிச்சல் பிறிட்டது.

''உங்களுக்கு அவர் மீது அநாவசியமாக வெறுப்பு....''

''அந்த வெறுப்பை நான் உன்னிடம் சொல்லவில்லையே, ஜானு.... நீயாக இப்போது வந்தாய். .... நீயேதான் ஏதேதோ பேச ஆரம்பித்தாய்....''

''சந்தானம் சார்! எப்போதுமே எனக்கு உங்கள் வார்த்தையில் மதிப்பும் மரியாதையும் உண்டு....''

''முகஸ்துதி செய்யாதே....!''

''சத்தியமாச் சொல்றேன்.....''

''அப்போ சுவரிலே முட்டிக் கொள்ளாதே..... பாழுங் கிணத்திலே போய் விழாதே !''

ஜானு ஒக்பிரமையுடன் அவனைப் பார்த்தாள்.

## முதல் முயற்சி — ௨ —




''ராஜா இது வரையில் எப்படியோ இருந்திருக்கட்டும். இனிமேல் மாறினால்.......?''

''சூரியன் மேற்கே உதிக்கும்....''

''எனக்காக அவர் எதை வேண்டுமானாலும் செய்வார்....''

''மோக வெறியில் இருக்கிறவர்கள் பேத்தினால், அதை மோக வெறியில் இருக்கிறவர்கள் நம்பத்தான் நம்புவார்கள்... சுயபுத்தி கைவிட்டுவிடும்.''

''உங்களுக்கு ராஜாவைப் பற்றி என்னென்ன தெரியும்?''

''இந்தக் கேள்வியின் பதில் உன்னை மாற்றப் போகிறதா? கண்டிப்பாக இல்லை. நீயும் அவனுமாகச் சேர்ந்து செய்த ஏற்பாடு ரொம்ப தூரத்துக்குப் போயாகி விட்டது....''

''அவர் இந்த வேலையை விட்ட பிறகு, வேறு வேலைக்குப் போய்விடுவார்.......''

''அவனுடைய நிழல் பின்தங்கி விடாது......!''

''அப்போ.....?''

''எங்கே போனாலும் ராஜா ராஜாவாகத்தான் இருப்பான்..... உன்னை விட அவனுக்குப் பணத்தின் மேல்தான் குறி......!''

''நீங்க சொல்றதெல்லாம் புரியறது.''

''ஆனாலும் மனசு மாறமாட்டேன் என்கிறது. இல்லையா?''

'ஆமாம்' என்று தலையசைத்த அவள், ''ஆனால் அவரை நான் கண்டிப்பாக

நல்லவராக்கி விடுவேன். எனக்கு நம்பிக்கையும் தைரியமும் இருக்கு'' என்றாள்.

''உன்னை நீயே ஏமாற்றிக் கொள்ளுகிறாய்.... ரகுபதிக்கும் ராஜாவுக்கும் ஒரே ஒரு வித்தியாசம்தான்.... ராஜாவுக்கு இன்னும் கல்யாணமாகவில்லை. அவ்வளவுதான்.....''

''கல்யாணம் நிச்சயமானால் நீங்கள் அதை நிறுத்த முயற்சி செய்வீர்களா?''

''கண்டிப்பாக மாட்டேன். ரகுபதி உன் அக்காவுக்குக் கணவனாக வராமலிருக்க வேண்டும் என்று நீயே துடியாய்த் துடித்தாய்..... ஆனால் அவனைப் போன்ற ஒருவனைக் கல்யாணம் செய்து கொள்ள நீ இப்போ துடிக்கிறாய்..... இதில் நான் தலையிடுவானேன்? ஆனால் ஒன்றை மட்டும் ஞாபகப்படுத்திக் கொள்..... வாங்கும் போது கவர்ச்சியாக இருக்கிற புடவை சாயம் போனால் தூக்கியெறியலாம்..... கணவனை அது மாதிரி செய்ய முடியாது... வாழ்க்கையில் ஒரு தடவைதான் ஒருத்தி வாழ முடியும்......''

நீண்ட நேரம் மௌனம் சாதித்த ஜானு பெருமூச்செறிந்தாள். பிறகு, ''என்னால் அவரை மறக்க முடியவில்லையே!'' என்றாள். அப்போது அவளுடைய கண்களில் நீர் சுரந்தது.

சந்தானம் பதில் சொல்லாமல், ஏதோ ஒரு புத்தகத்தை எடுத்துப் பிரித்துப் படிக்கலானான்.

**ம**று நாளே ஜானு சந்தானம் சொன்னதையெல்லாம் மறந்துவிட்டாள். அவளுடைய மனம் முழுதும் ராஜா நிரம்பி நிற்கவே, அவளுக்கு வேறு எந்த எண்ணமும் உண்டாகவில்லை.

அன்று மாலை ராஜாவைச் சந்தித்த போது, ''இந்தக் கலியாணத்தில் யாருக்குமே விருப்பமில்லை...அதிலும் முக்கியமாகச் சந்தானம் அதிருப்தியாக இருக்கிறார்...'' என்றாள் ஜானு.

ராஜா சிரித்தான்.

''எனக்கு இதில் ஆச்சரியமேயில்லை. அவன் கொண்டிருந்த கனவுகள் சிதைந்து விட்டன!''

''என்ன உளறுகிறீர்கள்?''

''அவன் உனக்காகத்தான் உங்கள் வீட்டிலேயே இருக்கிறான்...''

''பிதற்றுகிறீர்கள்! என்னைத் தங்கை மாதிரி பாவிக்கிறார்...''

''வேஷம்!''

''நானும் ஒரு அண்ணனிடம் பழகுவது போலத்தான் பழகுகிறேன்.''

''அதனால் அவன் கனவு காணக் கூடாது என்று சட்டமா?.... நாளைக்கே சீதாவுக்குக் கல்யாணமாகட்டும். உன் அம்மாவே உன்னை மணையில் உட்கார வைக்கப் பார்ப்பாள்.....''

''என் இஷ்டத்துக்கு விரோதமாக அம்மா செய்யறதாக இருந்தால், இந்தக் கல்யாணத்துக்கே இசையாமல் இருக்கலாமே!''

அதற்கு நேரடியாகப் பதில் சொல்லாத ராஜா, ''ஜானு.... நீ இது விஷயமாகச் சந்தானத்திடம் பேசாதே. கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும்......!'' என்றான்.

''ஆனால், நீங்கள் இப்படியே இருப்பதாகத் தெரிந்தால் நான் என் முடிவை மாற்றிக் கொண்டு விடுவேன். ஜானு கன்னியாகவே வாழ்நாள் முழுதும் கழிக்கத் தயங்க மாட்டாள்!''

''ஏற்கனவே நீ பயமுறுத்தியாகி விட்டது!''

''இது பயமுறுத்தல் இல்லை! சத்தியமாகச் சொல்லும் வார்த்தை.... என் கணவன் அயோக்கியன், திருட்டுப் புத்தி உள்ளவன் என்று என் காதில் விழுந்தால் என்னுடைய பிராணனே போய் விடும்!''

''நீ என்னை மாற்றிவிட்டாய் என்று ஏற்கனவே நான் சொல்லியாச்சு...!''

''காரியத்தில் காட்டணும்!''

திடீரென்று ராஜா கேட்டான்: ''கல்யாணமான பிறகு நான் உன் நலனுக்காக நேர்மையற்ற முறையில் நடந்து கொண்டால் அப்போது என்ன செய்வாய்? ஒரு பேச்சுக்குக் கேட்கிறேன்..... ஸீரியஸா எடுத்துக் கொள்ளாதே......!''

ஜானு அவளை அறியாத வெறுப்புடன் அவனைப் பார்த்தாள். பிறகு, ''ஆனால் நான் ஸீரியஸாகவே பதில் சொல்லி விடறேன்..... உங்களை விட்டு நான் என்றென்றும் பிரிந்து விடுவேன்..... எனக்கு மணவாழ்க்கையே துச்சமாகப் படும்.... மானம் தான் எனக்குப் பெரிது...'' என்றாள்.

''அடே, அப்பா! சும்மா வாயாலே சொன்னபோதே இப்படிச் சீறுகிறாயே!'' என்ற ராஜா, ''ஜானு, உன் வாழ்க்கையில் அது மாதிரி என்றுமே நடக்காது. என்னை நம்பு!'' என்றான்.

''அந்த நம்பிக்கை ஒண்ணுதான் தளராமல் இன்னும் இருக்கு. அதுவும் போய் விட்டால் எனக்கு....எனக்கு..'' ஜானு கண்களில் நீர் மல்க நின்றாள்.

''ஜானு, நீ அழுதால் எனக்கு வேதனையாக இருக்கிறது....!''

''நான் அழாமல் இருப்பது உங்கள் கையில்தான் இருக்கு....!''

''என்றென்றும் உன் மனம் மலர்ச்சியுடன் இருக்க, நான் என்னைத் திருத்திக் கொண்டாகி விட்டது, ஜானு!''

# இதுதான் டாடா-ஃபைஸன்-ராலீஸ் நிறைவு தரும் கற்பகத் தரு!

இதன் அடிமரம் டாடா-ஃபைஸன்-ராலீஸ் நிறுவனத்தை அறிவுறுத்துகிறது... பாரத மண்ணிலே ஆழ வேர் பாய்ச்சி நிற்கின்றது. பாரதநாட்டு விவசாயிகளுக்குப் பலமருளும் பாதுகாப்புக் கோட்டையாக விளங்கும் அடிமரம், துயருற்றபோதெல்லாம் துணைதந்து வழிகாட்டி வளமை எய்த உதவுகிறது

இதன் கிளைகள் பரவிப் பரந்துள்ள ராலீஸ் ஸ்டாக்கிஸ்டுகளையும் வியாபாரிகளையும் சுட்டுகின்றன. அன்னோர் மூலம் ராலீஸ் நம் நாட்டின் எந்தெந்த மூலையிலும் உள்ள எளிய உழவரையும் எட்டி, அவர் தம் பிரச்சினைகளைத் தீர்க்கவும் ஓங்கித் தழைக்கும் உயரிய விளைச்சல்களுக்கான உரங்கள், பூச்சிக்கொல்லிகள் அவர் கைக்கெட்டவும் உதவுகின்றன.

இதன் கனிகள் வளமையின் சின்னம், டாடா-ஃபைஸன் ராலீஸ் தயாரிப்புகள், பணிகள் ஆகியவற்றின் உதவியால் நம் விவசாயிகள் அடைந்திடும் செழிப்பான அறுவடையின் அறிகுறி.

ஆக மொத்தம்
அருட் பொழிவு...
நிறைவேற்றம்
கண்ட நற்பேறு...
இதன் உருவகமே
வரமருளும் இம்மரம்!




அனுபவம்
சேவை
செழிப்பு

# அம்பாஸிடர், விக்கார்ட், கான்ஸல், ராயலிஸ்ட், கிராம்வெல், கே கார்டன்

—டிரிப்-ட்ரை, ஆன்டி - க்ரீஸ் மற்றும் ‘முன்னதாகவே சுருக்கப்பட்ட’*சிறப்பான வகைகள்.

குளுமைக்கும் சுகத்திற்கும் நேர்த்தியான பின்னி பருத்தித் துணிகளால் தைக்கப்பட்ட சூட்டுகளும் டிராவுசர்களும் மிகச் சிறந்தவை உயர்ந்த பருத்தித் துணிகளுக்கு பின்னியை எப்போதும் நீங்கள் நம்பலாம்.

## மென்மையானது தன் நிகரில்லாதது பின்னி பருத்தி சூட்டிங்




உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாள போர்டு உள்ள அங்கீகாரம் பெற்ற ஸ்டாக்கிஸ்டுகளிடமிருந்து வாங்குங்கள்:

*Registered user of the ·SANFORIZED· Trade mark

BY 4277

அவள் அவனை ஏறிட்டுப் பார்த்தாள். சந்தேகம் என்னவோ அவனை விட்டு அகலவில்லை.

**பா**ரேறி அம்மாளைப் பார்த்துவிட்டுப் போன லட்சுமி அம்மாள், அக்குடும்பத்தைப் பற்றி எழுந்த நல்லெண்ணத்தால் திருப்தி அடைந்தாள் என்றாலும், மனம் குழம்பிக் கொண்டேயிருந்தது. என்னதான் அவளுடைய ஒரே பிள்ளை ராஜாவை அவள் உயிருக்குயிராய்க் கருதினாலும், ஜானாவையும் அவனையும் இணைத்துப் பார்த்த போது ஜானாவை நினைத்து அவள் மனம் இளகியது. ராஜாவைக் கண்டு ஜானா மயங்கியிருக்கிறாள். அல்லது ராஜா ஜானாவை மயக்கியிருக்கிறான். ஆனால் இந்த மயக்கம் காரணமாக நாளைக்கு அவர்கள் ஆசைப்படுகிறார்கள் என்று ஒரு கல்யாணத்தை நடத்தி வைத்தால் எதிர்காலம் எப்படி இருக்கும்? வர வர ராஜாவை நினைத்தாலே வயிறு பகீரென்று கலங்குகிறது. சில்லறை சில்லறையாக அவன் இது வரையில் எவ்வளவோ ரூபாய் கொண்டு வந்தாகி விட்டது. அவன் இதையே நாளைக்குத் தொழிலாக வைத்துக் கொண்டு விட்டால் என்னென்ன விபரீதங்கள் நிகழுமோ? ராஜாவைப் பெற்றுவிட்ட அவள் எதற்கும் தயாராக இருக்க வேண்டியதுதான். அவள் தன் தலைவிதியை நொந்து கொண்டு அழ வேண்டியதுதான். ஆனால் நன்முத்துப் போன்ற ஒரு பெண் தன் அறியாமையால் ராஜாவுக்கு வாழ்க்கைப்பட்டு அவதிப்படுவானேன்?

பிள்ளையின் அதிகாரத்துக்குட்பட்டே இருந்துவிட்ட லட்சுமி அம்மாளால் ராஜாவை எதிர்த்துப் பேச முடியவில்லை. பிள்ளையின் மீதிருக்கும் பாசத்துக்காக ஒரு பெண்ணைப் பலி வாங்கவும் மனம் இடம் கொடுக்கவில்லை. வயதான பெற்றோர்கள் இன்னும் எத்தனை நாட்களுக்கு இருக்கப் போகிறார்கள்? அவர்கள் கண் மூடிய பிறகு, ராஜாவும் ஜானாவும்தானே சேர்ந்து வாழ வேண்டும்? ராஜாவின் தில்லுமுல்லுகளினால் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் அவன் கண்டிப்பாக அகப்பட்டுக் கொள்ளுவான். குடும்ப பாரம் ஏற ஏற, தேவைகள் அதிகரிக்க அதிகரிக்க ராஜாவின் புத்தி இன்னும் கீழ்த்தரமாகப் போகுமே ஒழிய மேல்நோக்கிப் போகப் போவதில்லை. என்னதான் ராஜா இனிமேல் ஒழுங்காக இருப்பதாக வாக்குறுதி அளித்தாலும், அது போதையில் இருக்கிறவன் அளிக்கும் வாக்குறுதிதான்.

ராஜா கையும் களவுமாக அகப்பட்டுக் கொண்டு போலீஸார் அவனைக் கோர்ட்டில் நிறுத்தினால், ஜானா என்ன செய்வாள்? அதுவும் குழந்தைகளும் வேறு பிறந்துவிட்டால்? லட்சுமி அம்மாளால் நினைத்துப் பார்க்கவும் முடியவில்லை. பிள்ளையின் மீது அவளுக்கு நம்பிக்கையே கிடையாது. சிறுகச் சிறுக ஆரம்பித்த அவனுடைய திருட்டுப் புத்தி அதிகமாகிறதே ஒழியக் குறையவில்லை. இந்த நிலையில், அவளுக்கு மருமகள் வேண்டும் என்ற தாயாருக்குரிய ஆசை இருந்தாலும், பிள்ளைக்கு ஒரு கல்யாணம் தேவைதானா என்ற கேள்வியும் எழுந்தது. அதுவே அவளை வதைக்கவும் ஆரம்பித்தது. தன் மனத்தில் உள்ளதையெல்லாம் ராஜாவிடம் சொன்னால் என்ன நடக்கும் என்று அவளுக்குத் தெரியும்! தாயும் தகப்பனும் எப்படியாவது இருந்துகொள்ளட்டும் என்று அவன், பணத்தை அவர்கள் முகங்களில் தூக்கியெறிந்து விட்டு வெளியேறிவிடுவான்! ஆகையால், லட்சுமி அம்மாள் சாதுரியமாக நடந்து கொள்ள வேண்டும். பிள்ளையின் கண்களுக்கு அவள் அதிக அக்கறை உள்ளவள் போல் காட்டிக்கொண்டு அவன் அறியாமல் ஜானாவிடம் உண்மையை விளக்கிக் கூற வேண்டும். ஒரு கல்யாணத்தால் ஒரு பெண்ணின் ஜன்மமே பாழடையும் என்றால்,

---

## கட்டை வண்டியும் காரும்

வெளிப் பார்வைக்குத் துவேஷப் பிரசாரத்தினால்தான் விரைவில் பலன் ஏற்படுவது போலவும் அன்பு வழியினால் பலன் அதிகமில்லை போலவும் தோன்றும். ஆனால் இது பொய்த் தோற்றம்.

கட்டை வண்டியில் போகும்போது ஆட்டமும் அசைவும் அசாத்தியமாக இருக்கின்றன. மோட்டார் வண்டியில் போகும்போதோ உடம்பு அசங்குவதே இல்லை. இதிலிருந்து கட்டை வண்டிதான் வேகமாகச் செல்கிறது; மோட்டார் வண்டி மெதுவாகச் செல்கிறது என்று யாராவது சொல்வார்களா? துவேஷப் பிரசாரத்தில் ஆர்ப்பாட்டமும் தடபுடலும் அதிகமாக இருக்கலாம். ஆனால் அன்பு வழிதான் உண்மையில் சிறந்த வழியாகும்.

— ராஜாஜி

அதைத் தவிர்ப்பதுதான் நல்லது. நாளைக்குப் பிறக்கப் போகும் குழந்தைகளும், தங்கள் தகப்பனார் நேர்மையும் நாணயமும் இல்லாதவர் என்று எண்ணி ஏங்குவார்கள். அந்த ஏக்கம் இல்லாமல் இருக்க வேண்டுமானால் ராஜாவுக்குக் கல்யாணம் நடக்கக் கூடாது. அப்படி நடந்தாலும் அதற்குத் தாயாரே உடந்தையாக இருப்பது மகாபாவம்!.... நாளைக்கு, ராஜா திருந்தி விட்டான் என்ற நிலை வந்தால் (அந்த நிலை வந்தால் அதுவே ஒரு மகத்தான அதிசயம்தான்) லட்சுமி அம்மாளே ஒரு சிறந்த வரனைத் தேடிக் கொண்டு வருவாள்! அதுவரைக்கும் ராஜா பிரம்மச்சாரியாக இருப்பதுதான் நல்லது.

ஃ ஃ ஃ

**பா**கிரதியைப் பார்த்துச் சென்ற மூன்றாம் நாளே, அவள் பிற்பகல் ஒரு மணிக்குக் காந்தி நகர் தபாலாபீசுக்குச் சென்றாள்.

ஜானு லட்சுமி அம்மாளைப் பார்த்ததும் ஆச்சரியம் அடைந்தாள்.

வெளியே வந்து அவளைச் சந்தித்த ஜானு, ''என்னைப் பார்க்கவா வந்திருக்கிறீர்கள்?'' எனக் கேட்டாள்.

''ஆமாம்.....''

''உன்னிடம் கொஞ்சம் பேச வேண்டியிருக்கிறது!''

ஜானுவின் மனத்தில் பயம் உண்டாயிற்று. என்ன பேச இவள் வந்திருக்கிறாள்? கண்டிப்பாகக் கல்யாணத்தைப் பற்றித்தான் இருக்கும். குடும்பத்தைப் பற்றி, அம்மாவிடமிருந்து தெரிந்துகொள்ளாமல் இருந்ததையே ஜானுவின் மூலம் அறிந்து கொள்ளலாம் என்ற எண்ணத்துடன் வந்திருக்கிறாளோ?

அவளுடன் எங்கே பேசுவது என்று ஜானுவுக்குப் புரியவில்லை.

''என்ன மாமி, பேசணும்? எங்கே உட்கார்ந்து பேசறது?''

''வாயேன், அதோ, மர நிழல் இருக்கு...ஒரு பத்து நிமிஷங்கள்தான்!'' என்றாள் லட்சுமி அம்மாள்.

மௌனமாக ஜானு பின்தொடர வந்தவள் மரத்தை நோக்கி நடந்தாள். வேப்ப மரத்திலிருந்து விழுந்த பழங்கள் அங்கங்கே சிதறிக் கிடந்தன.

''நான் வர்றத்துக்கே பயந்தேன். நான் வந்தது தெரிஞ்சா, ராஜா என்னைத் தொலைச்சுடுவான்!''

ஜானு பயந்தாள்.

''நீங்கள் வந்ததை நான் அவரிடம் சொல்லவில்லை!''

''சொல்லிவிடக் கூடாது. ஜானு... அப்புறம் விபரீதமாகி விடும்!'' என்ற அவள், ''இந்தக் கல்யாணத்திலே எனக்குத் துளிக்கூட விருப்பமில்லை!'' என்றாள்.

''ஏன், என்னையோ என் அம்மாவையோ பிடிக்கவில்லையா?''

''ரொம்ப நல்ல குடும்பம் உங்கள் குடும்பம்.......''

''பின்னே, ஏன் பிடிக்கவில்லை...?''

''ஜானு! நீ உன்னை என் இடத்திலே ஒரு நிமிஷம் வெச்சுப் பாரு.... ஆபத்தான தொழிலில் கண்மூடித்தனமா ஒரு பிள்ளை இருக்கிறான். என்னிக்கு வேணுமானாலும் அவன் அந்த ஆபத்திலே சிக்கப் போகிறான்..... இந்த நிலையில் அவன் ஆசைப்படறான் என்கிறதுக்காக, ஒரு பெண்ணை அவன் தலையில் கட்ட உனக்கு மனசு வருமா?''

''வராது....ஆனா, வர்ற பெண் தன் பிள்ளையைத் திருத்தி விடுவாள்னு தோணினா.....?''

''ராஜா திருந்தற பிள்ளையில்லை. அவனைப் பற்றி உனக்குத் தெரியாது. அவன் முகத்தைப் பார்த்து நீ பேசியிருக்கிறாயே அவ்வளவுதான்.... அவன் தன்னைப் பற்றி எதைச் சொல்லலாமோ அதை மட்டும் உன்னிடம் சொல்லியிருக்கிறான்..... சொல்லாதது எவ்வளவோ இருக்கு......''

லட்சுமி அம்மாள் தன்னுடைய வார்த்தைகள் ஜானுவைத் திடுக்கிடச் செய்யும் என்றுதான் எண்ணினாள். ஆனால் ஜானு சிறிதும் கலங்காமல், ''அவரைப் பற்றி எனக்கு முன்னாலேயே தெரியும்.... அவரைத் திருத்தி விட முடியும் என்கிற தைரியமும் நம்பிக்கையும் எனக்கு இருக்கு.... ஏன், அவரேதான் திருந்தி விட்டதாகச் சத்தியம் பண்ணியிருக்கிறார்...!'' என்றாள்.

லட்சுமி அம்மாள் முகம் கவலையில் தோய்ந்து கிடந்தது. ''எனக்கு நம்பிக்கை இல்லை, ஜானு! என் பிள்ளை மீது எனக்கு ஆசை உண்டு, பாசம் உண்டு...ஆனால் என் மனச்சாட்சி அவனை யோக்கியன் என்றோ, நாணயஸ்தன் என்றோ சொல்ல மாட்டேன் என்கிறது...... அவனை நீ கல்யாணம் செய்து கொண்டு ஒரு சுகமும் அடைய மாட்டாய்!'' என்றாள்.

ஒரு தாயாரே தன் பிள்ளையைப் பற்றி இவ்வாறு வெளிப்படையாகப் பேசுவது ஜானுவுக்கு ஆச்சரியமாக இருந்தது. இவ்வளவு தூரம் வந்து அவளை எச்சரிக்க வேண்டுமானால், ராஜா அவள் நினைத்திருக்கும் அளவை மீறியே காரியங்கள் செய்து வந்திருக்கிறான் என்று புரிந்தது. (தொடரும்)

# இந்த ப்ரிஸில் முனைகளை பூதக் கண்ணாடியின் கீழ் ஒப்பிட்டுப் பாருங்கள்



# பினாகா

## டூத் பிரஷ்

**'வட்டவடிவுள்ள நுனிகளை' உடையதால்**
REG. PAT. NO.
**ஈறுகளைக் கிழிக்காது**

சுத்தமாக பல் துலக்குங்கள்
அபாயமின்றி பல் துலக்குங்கள்
பினாகா கொண்டு பல் துலக்குங்கள்

CIBA

# சந்ததம் வாழவரந் தா !

வித்துவான் சு. உமைதாணுப் பிள்ளை

தென்னெல்லை காத்தருளும்
      தேவி ! குமரி ! உன்
பொன்னடியைப் பாடிநான்
      பூசிப்பேன் — மன்னுலகில்
செந்தமிழ்ச் செல்வனெம்
      சீமான் இராஜாஜி
சந்ததம் வாழவரந் தா

தொண்ணூறுண் டான
      இளைஞனே ! தொண்டனே !
பண்ணூறும் பாசுரப்
      பாவமெல்லாம் — எண்ணூற
ஆளுகின்ற அண்ணலே !
      ராஜகோபா லா நீண்டு
வேளருளால் வாழ்க மகிழ்ந்து

தூங்கா அறிவைத்
      துணைகொள்ளும் தூயனே !
நீங்கா அறத்தை
      நிலைநிறுத்திப் — பாங்காக
நாட்டிற்காய் நற்பணிகள்
      செய்ராஜ கோபாலா !
ஊட்டமுடன் வாழ்க ஒளிர்ந்து !

உண்ணும் உணவையும்
      ஓராமல் உற்றபசி
எண்ணாமல் ஓய்வும்
      எடுக்காமல் — கண்ணுமே
துஞ்சாமல் காரியங்காண்
      ராஜகோபா லா ! என்றும்
எஞ்சாப் புகழுடன்வா ழி !

நீதி துணையிருக்க
      நேசம் நிறைந்திருக்க
ஆதி யிறைவ
      னருளிருக்க — மேதினியில்
சித்தம் இரங்கித்
      திருப்பணிகள் செய் சி. ஆர்.
எத்தினமும் வாழ்க இனிது !

---

இக்கவிதையின் ஆசிரியர் காலஞ்சென்ற கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களின் பேரர்.



துடிக்கும் நெஞ்சத்தை அமுக்கிப் பிடித்துக் கொண்டு டாக்டரின் முகத்தையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள் பார்வதி.

குழந்தையின் உடம்பைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டுத் தலைநிமிர்ந்தார் டாக்டர்.

''டாக்டர்!''

''உன்னிடம் எவ்வளவு ரூபாய் இருக்கிறது?''

''ஐந்து ரூபாய் இருக்கிறது, டாக்டர்!''

உதட்டைச் சுளித்தார் டாக்டர். ''போதாதம்மா. ஐம்பது ரூபாய் வேண்டும். நான் வேண்டுமானால் மெதுவாக 'பீஸ்' வாங்கிக் கொள்வேன். ஆனால் மருந்து வாங்கியாக வேண்டுமே!''

''அந்த மருந்து உங்களிடம் இல்லையா டாக்டர்?''

''இல்லையே!'' என்று கையை விரித்தவர், ''மருந்து வாங்கி வந்ததும் சொல்லியனுப்பு. வந்து இஞ்செக்ஷன் செய்கிறேன்'' என்று சொல்லிவிட்டு, வந்த வழியே போய்விட்டார்.

'டக்! டக்!' என்று நடந்து சென்ற டாக்டரையே வெறித்து நோக்கிக் கொண்டிருந்தாள் பார்வதி. அவளுடைய கண்கள் சுடுநீரைப் பொழிந்தன.

குழந்தை இருந்த பக்கம் திரும்பினாள். அது கிழித்துப் போட்ட வாழை நாராகத் துவண்டு கிடந்தது. அது பிழைக்க வேண்டுமென்றால் அவளுக்கு இப்போது ஐம்பது ரூபாய் வேண்டும். ஐம்பது ரூபாய்! அவளைப் பற்றிய வரையில் அது ஐம்பது லட்சத்துக்குச் சமம். அதற்கு அவள் எங்கே போவாள்?

# மஞ்சள் நிலைத்தது!

கே. ஜெயலக்ஷ்மி



சிந்திக்க நேரமில்லை. அப்படிச் சிந்திக்கும் ஒவ்வொரு விநாடியும் அவளுடைய அன்புச் செல்வி மரணத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கிறாளே!

ஏக்கத்துடன் குழந்தையின் முகத்தைப் பார்த்தாள் மறுபடியும். நினைவற்றுக் கிடந்த அந்தப் பிஞ்சு மனத்தில் நெஞ்சோவியத்தின் சாயலைக் கண்டது அவள் கண்கள். அசலைத்தான் உயிருடனேயே பறிகொடுத்தாகி விட்டது. அதன் சாயலையுமா இழந்துவிடுவது? அதற்கு அவள் மனம் இடந்தர மறுத்தது. விளைவு...? வீதியிலே இறங்கி நடந்தாள் பேதை.

வழக்கமாக அப்பளம் போடுகிற இடங்களில் போய்க் கேட்டுப் பார்த்தாள் பார்வதி. நூறு அப்பளத்தை வாங்கி உள்ளே கொண்டுபோய் வைத்துவிட்டுப் பிறகு அதற்கான ரூபாயைக் கொடுக்கக்கூடக் கையில் காசில்லாமல், 'முதல் தேதி வாயேன்' என்றே தவணை சொல்லும் அவளுடைய வாடிக்கைக்காரர்களிடம் இந்த மாதக் கடைசி சமயத்தில் ஐம்பது ரூபாய் ஏது? அப்படியே இருந்தாலும் இவளை நம்பித்தான் கொடுப்பார்களா? ஏமாற்றத்தைச் சுமந்து கொண்டு மீண்டும் நடந்தாள் பார்வதி.

''பணம் கிடைக்கவில்லையா?'' பக்கத்துக் குடித்தனக்காரி எதிர்ப்பட்டுக் கேட்டாள்.

''ஊஹூம்!'' தலையை ஆட்டினாள் பார்வதி. மரத்தினின்றும் பழுத்த இலைகள் உதிர்வது போல் அவளுடைய விழிகளிலிருந்து பொல பொலவென்று கண்ணீர்த் திவலைகள் உதிர்ந்தன.

''நான் ஒண்ணு சொல்கிறேன். கோபித்துக்கொள்ள மாட்டாயே, பார்வதி?''

''சொல்லுங்கள், பரவாயில்லை.''

''உனக்கு இருக்கிற பந்தபாசமெல்லாம் உன் மகள் செல்வி ஒருத்திதான். அவளையும் யமனிடம் வாரிக் கொடுத்துவிடாதே, பார்வதி. நான்கு வருடங்களுக்கு முன்பு உன்னை விட்டு விட்டு ஓடிப்போன உன் கணவன் இப்போது உயிரோடு இருக்கிறானோ இல்லையோ....''

''அப்படிச் சொல்லாதீர்கள்!'' என்று பதறிய பார்வதி, தன் கையால் அவள் வாயைப் பொத்தினாள்.

''நெருப்பு என்றால் வாய் வெந்துவிடாது, பார்வதி. கண்ணுக்குத் தெரியாதவனுக்காகக் கண்ணெதிரில் இருக்கிற ஒரே குழந்தையை இழப்பதா? வேண்டாம். நான் சொல்வதைக் கேள். தாலியை விற்று வைத்தியம் பண்ணு. ஆமாம். சொல்லிவிட்டேன். வேறு வழியில்லை'' என்று கூறிவிட்டு அவள் இவளைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் வேகமாகச் சென்றுவிட்டாள்.

சிலையாய்ச் சமைந்து போனாள் பார்வதி.

'தாலியை விற்று வைத்தியம் பண்ணு' என்று சொன்னவள் போய்விட்டாள். ஆனால் அந்தச் சொல் பார்வதியின் இதயத்தைக் குழம்ப அடித்தது. 'கண்ணுக்குத் தெரியாதவனுக்காகக் கண்ணெதிரில் இருக்கிற ஒரே குழந்தையை இழப்பதா? வேண்டாம். நான் சொல்வதைக் கேள்.'

வேறு வழியில்லை. அப்படித்தான் செய்தாக வேண்டும். வட்டிக் கடையை நோக்கித் திரும்பி நடந்தாள் பார்வதி.

ஐந்து வருடங்களுக்கு முன்பு வேண்டா வெறுப்பாகத்தான் பார்வதியின் கழுத்தில் மூன்று முடிச்சுக்களைப் போட்டான் அவளது அத்தான் கைலாசம். ஏனென்றும் அவன் அவளைக் காதலிக்கவில்லையாம். அம்மாவின் தொந்தரவுக்காகத்தான் அவளை மணந்து கொண்டானும்! அவன் வேறொரு பெண்ணைக் காதலிக்கிறானும். அவனே இப்படிப் பார்வதியிடம் வாய்கூசாமல் சொன்னான்.

'காதலிக்காவிட்டால் பரவாயில்லை. கல்யாணம் முடிந்து விட்டது. நாலு பேர் கேவலமாகப் பேசுவதற்கு இடம் வைக்காமல் ஏதோ இருவரும் மானமாக வாழ்ந்தால் போதும்' என்றே பார்வதி எண்ணினள். பின்னே என்னவாம்? கல்யாணத்தை விடக் காதல்தான் பெரிது என்று நினைக்கிற அளவுக்கு அவள் நாகரிகம் அடைந்திருக்கவில்லையே!

பார்வதி நினைத்ததுபோல் கைலாசமும் நினைத்திருந்தால் கவலையில்லை. அவனுடைய நினைவே வேறாக இருந்தது. அவன் ஓர் ஒன்றும் நம்பர் தமிழ்ப்பட ரசிகன். அவனுக்குக் காதல்தான் பெரிது. கல்யாணம் இரண்டாம் பட்சம். காதலுக்காக அவன் எதையும் செய்யத் தயங்கவில்லை. பெற்ற தாயும், கட்டிய மனைவியும்தானு ஒரு பிரமாதம்? 'நல்லவனுக்கு அடையாளம் சொல்லாமல் ஓடுவது' என்கிற பழமொழியை மெய்ப்பித்து விட்டான். 'மோகம் முப்பது நாள்' என்பார்கள். கல்யாணமாகி முப்பது நாட்கள் கூட அவன் பார்வதியுடன் வாழவில்லை. அவனுக்குத்தான் அவளிடம் மோகம் கூட இருக்கவில்லையே!

மாமியார் உறவு மட்டுமின்றி 'அத்தை' என்கிற ரத்தபாசமும் சேர்ந்துகொள்ளவே, பார்வதியால் தற்கொலையின் மூலம் விடுதலை அடைய முடியவில்லை. உயிர் வாழ்ந்தாள். அதே போல் அவளுடைய வயிறும் வெறுப்பிலேயேதான் வளர்ந்து வந்தது. அவள் கைலாசத்துடன் கொஞ்ச நாட்கள் வாழ்ந்ததற்கான சாட்சியோ அது? ஆனல் பார்வதியுடன் கொஞ்ச நாட்கள் வாழ்ந்ததற்கும் ஏதேனும் ஒரு சாட்சியை அவனிடமும் தோற்றுவிப்பதற்குத் தெய்வம் ஒரு வழி வகுத்து விட்டிருக்குமானல்...? சமூகத்தில் எத்தனை எத்தனை குற்றங்கள் — எத்தனை எத்தனை ஏமாற்றங்கள் — எத்தனை எத்தனை வஞ்சகங்கள் குறைந்திருக்கும்? இது பற்றித் தெய்வம் சிந்திக்கத்தான் வேண்டும்.

வயிற்றில் இருந்த சிசு பார்வதியின் கைக்கு மாறியபோது அவளுக்கு ஒரே ஆதரவான அத்தையையும் விழுங்கி ஏப்பம் விட்டு



விட்டது. அத்தையின் பெயரையே 'செல்வி' என்று தன் மகளுக்குச் சூட்டி விட்டாள் பார்வதி. விலையும் விளம்பரமும் இல்லாமல் அவள் தன் அத்தைக்குச் செய்யக்கூடிய நினைவுச் சின்னம் இது ஒன்றுதானே?

பார்வதி உழைக்கத் தயாராக இருந்தாள். ஆனால் அவளுடைய உழைப்புக்கு ஊதியம் கொடுக்கக் கூடிய சுபிட்ச நிலையில் அந்தச் சின்னஞ் சிறு கிராமம் இருக்கவில்லையே! பிறந்து வளர்ந்த ஊரில் வாழ வகையின்றிச் சென்னைக்கு வந்து சேர்ந்தாள் பார்வதி. எத்தனை லட்சம் மக்கள் வந்தாலும் அடைக்கலம் தந்து உதவும் புஷ்பக விமானமாயிற்றே சென்னை! அது பார்வதியை மட்டுமா நிராகரித்துவிடும்! அது அவளையும் வாழ வைத்தது! வாழ வைத்ததா? இல்லை, இல்லை. வாழ்வுடன் போராடிக் கொண்டிருக்கவே வைத்தது. லட்சக் கணக்கான மக்களுடன் பார்வதியும் அந்த வாழ்க்கைப் போராட்டத்தில் இரண்டறக் கலந்து போனாள்.

போராட்டங்கள் கூட ஒரே சீராக நடக்கக் கூடாது என்பது பொது விதி போலும்! இல்லாமற்போனால் பார்வதியின் மகளுக்கு விஷக் காய்ச்சல் வருவானேன்? அப்படியே வந்தால்தான் என்ன? தாலியை விற்கிற அளவுக்கு அது கடுமையாகத்தான் வர வேண்டுமா? வேண்டுமோ, வேண்டாமோ? வந்து தொலைந்து விட்டது. பார்வதி தாலியை விற்றுத்தான் ஆகவேண்டும். நேரம் விரைகிறதே!

**ப**தறும் உள்ளம் பாரமாய்க் கனக்க, பதற்றத்துடன் மார்வாடிக் கடைக்குள் நுழைந்தாள் பார்வதி. அங்கே இவளைப் போலவே இன்னும் சிலர்.

கையில் ஒரு பித்தளைத் தவலையை வைத்துக்கொண்டு ஒரு கர்ப்பிணிப் பெண் மார்வாடியிடம் கெஞ்சிக் கொண்டிருந்தாள். அவளுடைய புடவைத் தலைப்பை ஒரே மாதிரியான இரண்டு குழந்தைகள் பிடித்துக்கொண்டிருந்தன. இரட்டைக் குழந்தைகள் போலும்!

''ஏனம்மா நிற்கிறாய்? போ! போ!'' என்று கணக்குப்பிள்ளை விரட்டினார்.

''அப்படிச் சொல்லாதீர்கள்! சாகக் கிடப்பது என் குழந்தையாக இருந்தாலும் கூட இப்படி வந்து உங்களிடம் கெஞ்ச மாட்டேன். ஒன்று போனால் இன்னொன்று பிறக்கும். உயிருக்குப் போராடிக் கொண்டிருப்பது என் புருஷர். அவரை எப்படியும் காப்பாற்றித்தான் ஆகவேண்டும். இல்லாவிட்டால் நானும் இந்தக் குழந்தைகளும் தெருவிலே பிச்சைதான் எடுக்க வேண்டும். கொஞ்சம் தயவு செய்யுங்கள் சேட்!'' என்று கெஞ்சியழுதாள் அந்தக் கர்ப்பிணி.

''எல்லாம் சரிதானம்மா! இருபது ரூபாய் கூடப் பெறாத இந்தத் தவலைக்கு யார்தான் ஐம்பது ரூபாய் கொடுப்பார்கள்? நீயே சொல்லு....'' என்று ஏளனமாகக் கேட்டார் கணக்குப்பிள்ளை. சேட்டுக்குத் 'தமிள்'கூடத் தெரியாது. அவர் இந்தப் பேட்டைக்கு ரொம்பப் புதுசு.

''தவலைக்காகக் கொடுக்க வேண்டாம்.. என் நிலைக்காகக் கொடுக்கக் கூடாதா?'' என்று அழுகைக்கிடையே கெஞ்சினாள் அந்தப் பெண்மணி.

''அப்படிப்பட்ட காலம் வரட்டும். கொடுத்தால் போயிற்று'' என்று கேலியாகக் கூறிய கணக்குப்பிள்ளை பார்வதியைப் பார்த்து, ''உனக்கு என்னம்மா வேண்டும்?'' என்று கேட்டார்.

தன் கையில் வைத்திருந்ததைக் கணக்குப் பிள்ளையிடம் கொடுத்தாள் பார்வதி.

இவைகளெல்லாம் கணக்குப்பிள்ளைக்குச் சர்வ சகஜமான விஷயம்தான். என்றாலும் அவருடைய விழிகள் அவரையும் அறியாமல் வியப்பைச் சிந்தத்தான் செய்தன.

''சீக்கிரம் கொடுத்தால் நல்லது'' என்றாள் பார்வதி.

கணக்குப்பிள்ளையின் கைகள் சுறுசுறுப்பாக இயங்கின.

பார்வதி ரூபாய் நோட்டுடன் கடையை விட்டு வெளியே வந்தபோது அங்கே அந்தக் கர்ப்பிணிப் பெண் விம்மி விம்மி அழுது கொண்டு நின்றிருப்பதைக் கண்டாள்.

பார்வதியின் கையிலிருந்த ரூபாய் நோட்டுக்களை ஏக்கம் ததும்பும் விழிப் பார்வையால் துளைத்தெடுத்தாள் அந்தக் கர்ப்பிணிப் பெண்.

தன் துயரத்தை விடப் பெரிய துயரத்தைக் கண்டதும் பார்வதியின் நெஞ்சம் பாகாய் உருகியது.

''ஏனம்மா! உன்னிடம் வைச்சு வாங்குவதற்கு வேறு எதுவும் இல்லையா?'' என்று கேட்டாள் அநுதாபத்துடன்.

''நீங்கள் எதைக் குறித்துக் கேட்கிறீர்கள் என்பது எனக்குத் தெரிகிறது. ஆனால்... ஆனால்... அதுக்கெல்லாம் நான் கொடுத்து வைக்காதவள். பெற்றவர்களுக்குக் கூடத் தெரியாமல், வீடு வாசலை விட்டு — ஏன் ஊரை விட்டே ஓடி வந்து ஒரு கோவிலில் மாலை மாற்றிக் கொண்டவர்களுக்கு இந்தப் பெருமை எல்லாம் ஏது? என்னமோ வயிறு வளர்த்து வந்தோம். இனிமேல் அதுக்கும் மோசம் வந்து விடும்போல் இருக்கிறது. ஆறு மணிக்குள் மருந்தை வாங்கி வரா விட்டால் பிழைப்பது கஷ்டம் என்று டாக்டர் சொல்லி விட்டார். என்ன செய்கிறது என்றே தெரியவில்லை. யாருடைய வயிற்றெரிச்சலோ இப்படி வந்து துன்பம் செய்கிறது...'' என்றவள் துயரம் மிகுதியால் குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

''அழாதேம்மா, அழாதே! உனக்கு எவ்வளவு ரூபாய் வேண்டும்?'' வள்ளலைப் போல் வினவினாள் பார்வதி.

''ஐம்பது ரூபாய்!'' என்று அழுகைக்கிடையே கூறினாள் அந்தக் கர்ப்பிணிப்பெண்.

''இந்தா!'' தன் கையிலிருந்த ரூபாய்களை அப்படியே அந்தப் பெண்ணிடம் கொடுத்தாள் பார்வதி.

''உங்களுக்கு?'' என்று ஆச்சரியம் தாளாமல் கேட்டாள் கர்ப்பிணிப் பெண்.

''பரவாயில்லை. எடுத்துக் கொள். உன் துன்பத்தைவிட என் துன்பம் சிறியதுதான். சீக்கிரமாகப் போய் உன் புருஷனின் உயிரைக் காப்பாற்று. போ!'' என்றாள் பார்வதி உறுதியான குரலில்.

உலகில் ஏற்படும் விபரீதங்களுக்கெல்லாம் விதியின் விளையாட்டுத்தான் காரணம். நாடு காடாகிறது: காடு நகரமாகிறது. ஆனால் உத்தம மனித இயல்புகளான பரிவு, பண்பு, பாசம், நன்றி ஆகிய குணாதிசயங்கள் என்றுமே மாறுவதில்லை. டிசம்பர் 13ந் தேதியுடன் ஸ்ரீமதி சுந்தரம்மாள் மறைந்து ஆண்டுகள் ஏழாகின்றன. ஆனால் இன்றும் அவரது கணவர் பிரபல வக்கீல் ஸ்ரீ வி. தியாகராஜன் (முன்னாள் அபீஷியல் அஸ்ஸைனி) அவர்களும் அவருடைய குடும்பத்தினரும், சுந்தரம்மாளின் புனிதமான நினைவைப் பரிவோடும், பாசத்தோடும் போற்றி வருகின்றனர்.

குணக்குன்றாக விளங்கிய அந்த அம்மாளின் நற்குண நற்செய்கைகளை இன்றும் அவரது குடும்பத்தினர் நினைவு கூர்ந்து மனம் உருகுகின்றனர். அந்த அன்பு நினைவினிலேயே சொர்க்கம் புகுந்துவிட்ட சுந்தரம்மாளின் ஆன்மா சாந்தியடையுமென நம்புகின்றனர்.



Adv.

## அஞ்சலி



பேரன்புக்கும் பெருமதிப்புக்கும் உரிய எங்கள் தந்தையார் திரு வி. சுப்பையா முதலியார் விண்ணுலகெய்தி ஆண்டுகள் மூன்று ஆகின்றன. 18-12.67 அவரது நினைவு நாள். ஆனால், அவரை நாங்கள் மறக்கவேயில்லை! எப்படி மறக்க முடியும்? மூன்று ஆண்டுகள் ஆனாலும் அவர் நினைவின் பசுமை மாறவேயில்லை.

அன்புத் தந்தைக்கு எங்களுடைய இதய பூர்வமான பக்தி கலந்த அஞ்சலி.

எஸ். வையாபுரி. B. E., சென்னை
எஸ். ராஜசேகரன், பெங்களூர்

## பாரதி பற்றி ராஜாஜி

மகாகவி சுப்பிரமணிய பாரதியார் கவியரசர் மட்டுமல்ல. அவர் இயற்றியுள்ள 'ஞான ரதம்' கற்பனை வளம் செறிந்த ஒரு வசன நூல் : இந் நூலுக்கு ராஜாஜி 8–3–36ல் வரைந்த முன்னுரை :

''இப்புத்தகத்தில் பாரதியார் எடுத்த விஷயங்கள் மிகப் பெரியவை. விஷயங்களின் கௌரவம் ஒருபுறமிருக்க, தற்காலத்தில் தமிழ் வாசக நடை எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைப் பாரதியார் எழுதிய இச் சிறு புத்தகத்தில் கண்டு கற்கலாம். அர்த்தபுஷ்டியில்லாத அரற்றலின்றி, சொன்னதையே சொல்லி பக்கங்கள் நிறைப்பதுமின்றி ஸ்படிகம் போன்ற தெளிவும் வைரம் போன்ற உறுதியும் பெற்று, இலக்கணப் பிழைகள் ஒழிந்த பேச்சுத் தமிழை எவ்வாறு ஆழ்ந்த கருத்துக்களை எழுதவும் சித்திரிக்கவும் உபயோகப் படுத்தலாம் என்பதைப் பாரதியார் வசன நடையில் நாம் பார்க்கலாம். தமிழுக்குள் கிடக்கும் எல்லையற்ற சக்தியையும் லாகவத்தையும் பாரதியார் எழுத்துக்களில் தமிழ் மக்கள் பார்த்து அறிந்துகொள்ள வேண்டும். பயன் கொண்ட கற்பனா சக்தியும், கொழுந்து விட்டெரியும் நாட்டன்பும், விசாலமான தரும ஞானமும், நோவாத ஹாஸ்ய ரஸமும், தமிழ்த் தாயின் செல்லக் குழந்தை, வரப்பிரஸாதர் பாரதியார் எழுதிய இந்நூலில் ஜ்வலிப்பதை அநுபவிக்கலாம்.''



ராஜாஜி பாரதியாரிடமும் பேராசிரியர் கல்கியிடமும் ஒரு குறிப்பிட்ட குண நலனைக் கண்டு சிலாகித்திருக்கிறார். இம் முன்னுரையில் பாரதியாரின் 'நோவாத ஹாஸ்ய ரஸ'த்தைப் பாராட்டும் ராஜாஜி, கல்கியவர்கள் காலமானபோது அவரது சிறப்பியல்புகளில் ஒன்றான, ''துன்புறுத்துவது ஹாஸ்யம் என்ற பொய்யை அகற்றி உண்மை மகிழ்ச்சியுடன் கூடிய சிரிப்பைத் தமிழ் நாட்டில் பரப்பி வந்தார்...... அறிவும் இரக்கமும் நிறைந்திருந்தது கல்கியின் சிரிப்பெழுத்தில்'' என்று எழுதினார். இதிலிருந்து அமரகவி, அமரர் கல்கி ஆகியோரின் நகைச்சுவைக்கு விளக்கம் கிடைப்பதோடு, ஹாஸ்ய ரஸம் குறித்து ராஜாஜி அவர்களின் நுண்ணிய ரசனையையும் அறிய முடிகிறதல்லவா?

– வி. ச. வாசுதேவன்

(மகாகவி சுப்பிரமணிய பாரதியாரின் பிறந்ததினம் இம் மாதம் பதினொன்றாம் தேதி நிகழ்கிறது.)

''என்னால் நம்பவே முடியவில்லே. நீங்கள் தெய்வப் பிறவி.'' — உணர்ச்சி வசப்பட்டுப் பேசினாள் அந்தப் பெண்.

''தெய்வமுமில்லே. மண்ணாங்கட்டியும் இல்லே. நானும் உன்னைப் போன்ற சாதாரணப் பெண்தான். அதனால்தான் என் மகளின் உயிரைவிட உன் கணவரின் உயிரைப் பெரிதாக நினைக்கிறேன். போ! போய் உன் மஞ்சளைக் காப்பாற்றிக்கொள்!'' என்று அவளை விரைவுபடுத்தினாள் பார்வதி.

அந்தக் கர்ப்பிணிப் பெண் பார்வதியின் கால்களைத் தொட்டுத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டு குழந்தைகளுடன் வீட்டை நோக்கி ஓடினாள்.

அவள் போவதையே பார்த்துக்கொண்டு அசைவற்று நின்றாள் பார்வதி.

''அடிப் பாவி! அங்கே குழந்தை செத்துக் கிடக்குது. இங்கே மரம் மாதிரி நின்னுக்கிட்டிருக்கியே! இது நியாயமா?'' என்று அதட்டலாகக் கேட்டபடியே பார்வதியின் பக்கத்துக் குடித்தனக்காரி ஓடி வந்தாள் குடல் தெறிக்க.

''ம்...'' பார்வதியின் முகத்தில் ஓர் ஏளனப் புன்னகை நெளிந்தது.

''பார்வதி!'' — தோளைப் பற்றி உலுக்கினாள் ஓடிவந்தவள், மூச்சிரைக்க.

''என் மகள் செத்துப் போய்விட்டாள். அவ்வளவுதானே! போனால் போகட்டும்!'' விரக்தியாகக் கூறினாள் பார்வதி.

''பத்து மணிக்கு வந்தவள். மணி இரண்டாகுது. அப்பவே பணத்தை வாங்கி வந்திருந்தால் உன் மகள் கட்டாயம் பிழைத்திருப்பாள். இவ்வளவு நேரமா இங்கே என்னடி செய்துக்கிட்டிருந்தே?''

''சொல்லித்தான் ஆகணுமா? என்னைப் போல் ஓர் ஏழைப் பெண்ணின் மஞ்சளைக் காப்பாற்றினேன். ஆமாம். அவள் கணவனின் உயிரைக் காப்பாற்ற என்னிடமிருந்த பணத்தைக் கொடுத்து விட்டேன். இனிமேல் என் வீட்டிலே எனக்கு என்ன வேலே?'' என்றாள் பார்வதி பித்துப் பிடித்தவளைப் போல்.

''உனக்குப் பைத்தியம்தான் புடிச்சுட்டுது. வா, வூட்டுக்கு...'' என்று கூறிப் பார்வதியைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனாள் அந்தப் பெண்பிள்ளை.

பாவம், அவளுக்கு உண்மை தெரியாது. பார்வதி எவளோ ஒருத்தியின் மஞ்சளை மட்டும் காப்பாற்றவில்லை. தன் மஞ்சளையும் சேர்த்துத்தான் காப்பாற்றிக் கொண்டிருக்கிறாள் என்பது பார்வதிக்கே தெரியாதபோது....அவளுக்கு எப்படித் தெரியும்?

# சாயல்கள் கண்ணுக்கழகாயிருந்தால் போதுமோ!

தரத்தைக்
கைவிடாதீர்கள்
ஒருபோதும்

என்றும் குறிப்பிட்டுக் கேளுங்கள் **நேரோலாக்**

உங்கள் இல்லத்தை எழில்படுத்துவதற்கென, தேர்ந்தெடுக்கப் பல்வேறு வகையான கொள்ளையழகுச் சாயல்கள். புதுமைக் கலை மாறாமல் பல்லாண்டு நிலைத்திருப்பவை. இந்தியாவிலேயே முதன்முதலாக அக்ரிலிக் அடிப்படை கொண்ட எமல்ஷன் பெயிண்டை அறிமுகப்படுத்தியவர்கள்.




**குட்லாஸ் நேரோலாக் பெயிண்டுகள்—வாங்கக் கிடைப்பவற்றுள் மிகச் சிறந்தவை**

INTER PUB/GNP/3 TAM

**குட்லாஸ் நேரோலாக் பெயிண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட், 29, பெரியண்ண மேஸ்திரி தெரு, சென்னை-1**

# பிரம்ம சூழ்ச்சி

பி.எஸ்.பத்ரிநாராயணன்



இடம்: கைலாசம்.

பாத்திரங்கள்: சிவபெருமான், பிரம்மா, விசுவாமித்திரர், வசிஷ்டர், யமகிங்கரர், சித்திரகுப்தன்.

## காட்சி 1:

" சிவபெருமான்: என்ன பிரம்மரே! ஏன் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டிருக்கிறீர்? என்ன சமாசாரம்?

பிரம்மா: பெரிய சமாசாரம், பிரபு, தொழில் தகராறு! என்னுடைய படைப்புத் தொழிற்சாலையில் கதவடைப்பு. என் தொழிலை நடத்த முடியாதபடி இந்த மானிடர்கள் பூலோகத்தில் பெரும் தொந்தரவுகளைத் தருகின்றனர், சுவாமி. குடும்பக் கட்டுப்பாடு, கர்ப்பத் தடை மாத்திரைகள், லூப் என்றெல்லாம் சொல்லிக்கொண்டு இந்தப் பூலோகத்தினர் கடந்த சில மாதங்களாக, என் தொழிலாம் படைப்பை நடத்த முடியாமல் தொந்தரவு கொடுக்கின்றனர். ஜனத்தொகை பெருகிவிட்டதாகவும், உண்ண உணவு போதவில்லையென்றும், உடுக்க உடையும் இருக்க இடமும் கிடைப்பது அரிது என்றும் பிரசாரம் செய்து என் படைப்புத் தொழிலுக்கு இடைஞ்சல் தருகின்றனர், மானிடர்கள். இந்த ரீதியில் போனால் என் தொழிற்சாலையை மூடவேண்டிய சூழ்நிலையல்லவா ஏற்படும்?

சிவ: சரி. இதைக் கவனிப்போம். யமதர்மனே, நீ வந்த காரணம் என்ன?

யமன்: சுவாமி, என் தொழிலிலும் பல இடைஞ்சல்கள் ஏற்பட்டிருக்கின்றன. எனக்கும் அதிகத் தொந்தரவு கொடுக்கிறார்கள் இந்த நரர்கள். உதாரணமாக இரண்டு நாட்களுக்கு முன்னதாக நான் ஒருவனின் ஆயுளை முடிக்க வேண்டியிருந்தது. ஆனால் அவனிடம் நெருங்க முடியவில்லை. டாக்டர்கள் என்று சொல்லிக் கொண்டு அவனைச் சுற்றிலும் பலர் நிற்கிறார்கள். நான் அவன் மூச்சை நிறுத்துகிறேன். வேறொருவன் ஒரு குழாய் மூலம் அவனுக்கு மூச்சுக் கொடுக்கிறான். பலத்த நெருக்கடியில் கடைசியில் அந்தக் காரியத்தை முடித்தேன். இதயத்தை வேலை நிறுத்தம் செய்து உயிரை எடுத்துக் கொண்டு வருவதற்குக்கூட எதிராக இப்பொழுது முழுமூச்சாக டாக்டர்கள் வேலை செய்து கொண்டிருப்பதாகத் தெரிகிறது. இந்த ரீதியில் போனால் என் வேலையை ராஜிநாமா செய்வது தவிர வேறு வழியில்லை.

விசுவாமித்திரர்: போகிற போக்கைப் பார்த்தால், பிறப்பதற்கும் விடுவதில்லை, இறப்பதற்கும் இடம் கொடுக்க மாட்டேன் என்கிறார்கள் என்று சொல்.

வசிஷ்டர்: கோபப்பட வேண்டாம். மக்களைப் படைத்து விட்டு அவர்களுக்கு ஏற்ற வசதிகளை நாம் செய்யாமல் இருப்பதால்தான் இனி யாரும் பிறக்காமலே செய்து விடுவது என்கிற முடிவுக்குப் பூலோகத்தவர் வந்திருக்கின்றனர் போலும்!

சிவபெருமான்: அப்படியானால் என்மேல் குறை சொல்கிறீர்கள் என்று அர்த்தம். நான் எல்லோருக்கும் உண்பதற்கும் உடுப்பதற்கும் இருப்பதற்கும் வேண்டிய வசதிகள் பூமியில் அளித்துள்ளேனே.

சித்ரகுப்தன்: சுவாமி! தாங்கள் கொடுத்திருக்கிறீர்கள். ஆனால் அங்குள்ளவர்கள் ஒருவரையொருவர் ஏமாற்றிக் கொண்டு சரியாகப் பங்கிட்டுக் கொள்ளாமலிருக்கின்றனரே?

பிரம்மா: சுவாமி, பிரச்னை திசை திரும்புகிறது.

சிவபெருமான்: சரி, நானே இது விஷயமாக முடிவு செய்கிறேன். (சித்திரகுப்தனை நோக்கி) நீ மட்டும் என்னுடன் வா.

## காட்சி 2:

[சிவபெருமான் சித்திரகுப்தனை நோக்கி, மானிடர்களைப் பற்றிய கணக்குப் புத்தகங்களையும் அவர்களுடைய பாப புண்ணிய வரலாறுகளையும் கொண்டு வரச் சொல்லுகிறார்.]

சிவ: நீ கொண்டு வந்த புத்தகத்திலிருந்து இரண்டு பேர்களைப் பற்றிப் பார்ப்போம்.

சித்ர: அப்படியே சுவாமி. (புத்தகத்தைப் பிரிக்கிறார். ஒரு படத்தைக் காட்டி) இவர் பெயர் புண்ணியசாமி. பண்ணியவை பாவங்கள். மூத்த மகனைப் பிறந்த இவருடன் கூடப்

பிறந்தவர்கள் பதினொரு பேர் எல்லோரையும் ஏமாற்றிச் சொத்துக்களை ஏப்பமிட்டார். புண்ணியசாமி என்று பெயருக்குத் தகுந்த ஒரே காரியம், இவர் தேர்தலுக்கு முன்னால் ஏழைகளுக்குப் பணம் தந்ததுதான். அவர் குறிக்கோள் எதாயினும் இதனால் சில ஏழைகள் பயனடைந்தார்கள் அல்லவா?

சிவ: இவருக்கு யம தண்டனை என்ன?

சித்ர: இவர் எட்டாவது பிள்ளையாக மறுபடியும் பாரதத்தில் பிறந்து தாய் தந்தையரால் எவ்விதக் கவனமும் செலுத்தப்படாமலிருந்து, வீட்டை விட்டு வெளியேறிப் பிச்சை எடுத்துக் கஷ்ட வாழ்க்கை நடத்த வேண்டுமென்பது. ஆனால் பிரபோ! இந்திய பூமியில் உள்ள சர்க்கார் மூன்று குழந்தைகளுக்கு மேல் கர்ப்பத் தடை என்று சொல்லிக்கொண்டிருப்பதால் இவரை மறுபடியும் எட்டாவது பிள்ளையாகப் பிறப்பிப்பது பிரம்மாவுக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது.

சிவ: உண்மை! உண்மை! சரி. அடுத்தவன் புராணத்தைப் படி, பார்ப்போம்.

சித்ரகுப்தன்: இவர் பெயர் கற்பூரசாமி. இயற்பெயர் சிவசாமி. இவர் ஒரு கோயில் குருக்களாக இருந்தவர்.

சிவ: எனக்குப் பணிவிடை செய்தவரா?

சித்ர: ஆம் சுவாமி. ஆனால் இவர் தங்கள் கோவிலுக்கு வருபவர்கள் கொண்டுவரும் கற்பூரங்களில் பாதியை மிச்சப்படுத்தி மறுநாள் காலையில் கடைகளில் விற்றுவிடுவார். இது தங்களுக்குச் செய்த அநீதி அல்லவா! சிவ சொத்து குலநாசம் அல்லவா? ஆனால் அவ்வாறு குலநாசம் செய்ய முடியாதபடி இவரது மனைவியார் தான தருமங்களும் இறை பணியும் செய்து வந்தார்கள். இப்பொழுது இவர் மனைவியார் இல்லை. இவருடைய மகனுக்கு ஐந்து பிள்ளைகள். இவரை ஆறாவது பிள்ளையாகப் பிறக்கச் செய்து அந்தக் குலத்தை நாசம் செய்ய வேண்டும் என்பது தண்டனை. ஆனால் இவரது மகன் அறுவை செய்துகொண்டு விட்டதால் தவிக்கிறார் பிரம்மா!

சிவ (கோபத்துடன்): போதும்! போதும்! பூலோகச் செய்திகள். எங்கும் ஒரே மோசடியும், அநீதியும் அல்லவா பரவியிருக்கின்றன! இந்தப் பூலோகத்தையே அழித்து விடுகிறேன்.

[ தம் நெற்றிக் கண்ணைத் திறக்கவிருக்கிறார். அப்பொழுது நாரதர் அங்கு வருகிறார் ]

நாரதர்: சுவாமி! கோபம் வேண்டாம்!

சிவ: பூலோகத்தில் உள்ளவர்கள் நம்முடைய ஆட்சிக்கு எதிராக அல்லவா வினையாடிக் கொண்டிருப்பதுபோல் தெரிகிறது!

நாரதர்: சுவாமி, தாங்கள் கோபப்பட்டால் பூலோகம் ஒரு நிமிடத்தில் அழிந்துவிடும். ஆனால் அழிப்பதல்லவே நம் நோக்கம். அதை நல்ல முறையில் உருவாக்க வேண்டும் என்பதல்லவா?

சிவ: ஆம், ஆம். நன்று சொன்னாய்.

நாரதர்: சுவாமி, இதற்கெல்லாம் காரணம் என்ன என்று நினைக்கிறீர்? உமக்கு எதிராகப் பிரம்ம லோகத்தில் சூழ்ச்சி நடக்கிறது. வாருங்கள், காண்பிக்கிறேன்.

சிவ: என்ன, எனக்கு எதிராக பிரம்ம லோகத்திலே சூழ்ச்சியா? வா, பார்ப்போம்.

## காட்சி 3

[ இடம்: பிரம்மாவின் படைப்புத் தொழிற்சாலை. பிரம்மாவின் உதவியாளர் அவருக்கு அருகில் இருக்கிறார். நாரதரும் சிவனும் கதவு ஓரத்தில் நிற்கின்றனர் ]

பிரம்மா (உதவியாளரை நோக்கி): நம் விஷயம் சிவபெருமான் வரைக்கும் போய் விடுமோ என அஞ்சுகிறேன்.

உதவியாளர்: சுவாமி! நீர் ஒன்றும் பயப்படவேண்டாம். பிரம்ம ரகசியம் என்பது அவ்வளவு சீக்கிரம் தெரியக் கூடியதல்ல.

பிரம்மா: ஆனாலும் இந்தக் கலகக்கார நாரதர் இங்கு சுற்றிக் கொண்டிருக்கிறார். அவரால் ஏதாவது உபத்திரவம் நேரலாம்!

[ சிவபெருமானால் அதற்கு மேல் பொறுக்க முடியவில்லை. கோபாவேசத்துடன் தொழிற்சாலைக்குள் நுழைகிறார். சிவபெருமானைக் கண்ட பிரம்மாவும் அவரது உதவியாளரும் நடுங்குகிறார்கள். ]

சிவ: ஏன் நடுங்குகிறீர்?

பிரம்மா: சுவாமி! மன்னித்து விடுங்கள். நான் செய்த தவற்றை மன்னித்து விடுங்கள்.

[ இறைவன் காலில் தொப்பென்று விழுகிறார். ]

சிவ: விஷயத்தைச் சொல்லும்.

பிரம்மா: சுவாமி, நான் இந்தப் படைப்புத் தொழிலைப் பலகாலம் குறையின்றிச் செய்து வந்திருக்கிறேன். ஆனால் கடந்த சில வருடங்களில் என்னால் அவ்வாறு செய்ய முடியவில்லை. காரணம் பூலோகத்தின் ஒழுக்கக் கேடுகள். காமத்துக்கு அதிபதியான மன்மதன் பூலோகத்தில் அந்த உணர்ச்சியை 'நாகரிகம்', சினிமா, ஆடை இவற்றின் மூலமாக வேகமாக வளர்த்து விட்டான். காமத்தின் முடிவு பிறப்பன்றோ! அவனுடன் போட்டி போட்டு என்னால் படைப்புத் தொழிலை நடத்த முடியவில்லை. இரு விநாடிகளுக்கு மூன்று குழந்தைகளை இந்திய தேசத்தில் பிறப்பித்தேன். அதுவும் போதாத அளவுக்குக் காமம் பெருகிற்று. இதைவிட வேகமாக என்னால் நடத்த முடியாது என்கிற சூழ்நிலை ஏற்பட்டவுடன் எனக்கொரு யோசனை தோன்றியது. மனிதனைப் படைக்கு முன் அவனுடைய மூளை என்கிற பாகத்தில் இயற்கைக்கு விரோதமான வக்ர யோசனைகளை வைத்து என் தொழிலுக்கு எதிர்ப்பு ஏற்பட நானே வழி செய்தேன். சுவாமி நான் செய்த தவற்றை மன்னித்தருள வேண்டுகிறேன்.

சிவ: எழுந்திரும். கவலைப்பட வேண்டாம். உம்மேல் தவறில்லை. உம்மை மன்னித்தேன். இதற்கு எல்லாம் காரணம் அந்த மன்மதன் அல்லவா? அவனை.... ஆனால் அவனை என்ன செய்ய முடியும்? முன்பே அவனை எரித்தாகி விட்டது. அப்படியும் உருவில்லாமல் அனங்கனாகவே இந்தப் பாடு படுத்துகிறான்.... அவனை என்ன செய்வது?

[ சிவபெருமான் கலங்குகிறார் ]

திரை

# அமிர்தாஞ்சன் கிரைப் மிக்ஸ்சர்




சிறந்ததையே உங்கள் குழந்தைக்குக் கொடுங்கள்.
அமிர்தாஞ்சன் கிரைப் மிக்ஸ்சர் குழந்தையை
ஆனந்தமிகு ஆரோக்யத்துடன் வளர உதவுகிறது.
அமிர்தாஞ்சன் லிமிடெட், சென்னை-4

அற்புதமான அசல் காபி

# ப்ரூக் பாண்ட்

# பான்

## இன்ஸ்டன்ட் காபி

### எப்பொழுதும் அப்பொழுதே வறுத்த மணத்துடன் கூடியது




## "ம்ம்.. அந்த மணம்! அந்த ருசி! அது பான் தான்."

ஒரு டின் பான் வாங்குங்கள். அதில் அசல் காபி அருந்திய திருப்தி அடைவீர்கள். வெந்நீரை ஊற்றியவுடன் பானிலிருந்து "கம்" என்று எப்பொழுதும் அப்பொழுதே வறுத்த மணத்துடன் கூடிய அசல் காபி உருவாகிறது. ஞாபகமிருக்கட்டும்—பான் நூற்றுக்கு நூறு பரிசுத்தமான காபி. பான் பொறுக்கி எடுத்த காப்பிக் கொட்டைகளிலிருந்து தயாரிக்கப்பட்டு அதன் மணமும், குணமும், புதுமையும் குன்றுதிருக்க காற்றுப் புகாதஸில் வைக்கப்பட்ட டின்களில் உங்களுக்கு வருகிறது. ருசி, மணம், திடம் நிறைந்த பான் இன்ஸ்டன்ட காபி—இன்றே வாங்கிப் பாருங்கள்: அது தனிச்சிறப்பு வாய்ந்தது; ஏனென்றால் "எப்பொழுதும் அப்பொழுதே வறுத்த மணத்துடன் கூடியது."

அதை தயார் செய்வதோ மிகச் சுலபம்! நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் ஒரு தேக்கரண்டி பானுக்கு சுடு தண்ணீர்சேர்க்க வேண்டியதுதான். உடனே "கம்" என்று மணம் வீசிக்கொண்டு அசல் காபி உருவாகிறது: எவ்வளவு கப் வேண்டுமானாலும் தயாரிக்கலாம்—பான் அசல் காபி.

1670/6 TAM

# ஓசியில் வந்தாலும் 'ஏசி' வேண்டாம்!



'ரஷின்ஸ்'

"அமெரிக்கத் தூதரகத்தில் உபயோகித்து வந்த ஓர் 'ஏர்கண்டிஷனர்' ரொம்பக் குறைந்த விலைக்கு வருகிறது. வாங்கிப் போடுங்களேன், சார்!" என்று என் உதவியாளர் ஒருவர் ஆசை காட்டிய போது 'வேண்டாம்' என்று சொல்ல முடியவில்லை என்றால். காரணங்கள் பல.

முதலாவதாக, நான் இக்கம்பெனிக்கு மானேஜராக வந்து ஆறே மாதங்கள் ஆகின்றன. என்னை ஒரு பெரிய இடத்துப் பிள்ளை என்று என் ஆபீஸில் உள்ளவர்கள் நினைத்துக் கொண்டிருக்கின்றனர். என் வீட்டில் ஓர் 'ஏசி'யிருந்தால் என் அந்தஸ்து அவர்கள் மனங்களில் மேலும் ஒரு படி உயரும். இரண்டாவதாக, என் உதவியாளர் வாங்கச் சொல்லி நான் வேண்டாம் என்று சொன்னால் என்னிடம் பணம் இல்லை, ஆகவே தான் வேண்டாம் என்கிறேன் என்று எண்ணி விடுவார்களே! மூன்றாவதாக, 'குறைந்த விலை'க்கு வருகிறது என்பது. நாலாவதாகவும், மிக முக்கியமானதுமாக அமெரிக்கத் தூதரகத்திலிருந்து வாங்கப் போகும் அயல்நாட்டு மோகம்.

ஆகவே, "ஓ, வாங்கினால் போச்சு. என்ன விலை?" என்றேன்.

"அறுநூறு ரூபாய்தான், சார்! அவங்க 'புக் வேல்யூ'; ரொம்ப 'சீப்' இல்லை" என்றார் அவர்.

"ஓ! ரொம்ப 'சீப்'தான்!" என்றேன். ஆனால் என் உள் மனம் முடிந்தால் நாமாகவே பேரம் செய்து கொஞ்சம் குறைக்கப் பார்க்கலாம்" என்றது.

"எப்போது பார்க்கலாம்?" என்றேன்.

"உங்களுக்குச் சௌகரியமாக இருந்தால் மத்தியானம் சாப்பாட்டு நேரத்திலேயே போய்ப் பார்த்துவிட்டு வந்துவிடலாம்."

"அப்படியே செய்யலாம். வரும்போது எங்காவது ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு வந்து விடலாம்" என்றேன்.

நான் ஓர் அப்பாவி மானேஜர். என் தந்தை தாம் அநுபவபூர்வமாகக் கண்டவைகளை எனக்கு உபதேசித்திருந்தார். அவைகளில் முக்கியமானவை, 'உன் 'உதவியாளர்கள் ஏதாவது சொன்னால் உடனே தட்டிக் கழிக்காதே. முழுவதையும் இந்தக் காதால் கேட்டு அந்தக் காதால் விட்டுவிடு. முடிந்தால் ஒவ்வோர் உதவியாளரையும் தனித் தனியே அழைத்து உலக விஷயம், ஆபீஸ் விஷயங்களை இலேசாக விசாரி. அப்போது உன் ஆபீஸின் நடப்பு விவரங்கள் ஒவ்வொருவர் வாயிலிருந்தும் ஒவ்வொரு உருவத்தில் வரும். இதிலிருந்து நீ ஒவ்வொருவரையும் எடை போட்டுத் தெரிந்து கொள்ளலாம்.'

நான் இவைகளை வேத வாக்காக நினைத்து நிறைவேற்றத்தான் பார்த்தேன். ஆனால் மானேஜர் என்றால் சிங்கம் புலி என்று நினைத்து என்னிடம் சிலர் பேசவே தயங்குகின்றனர். இவர்களிடம் எப்படி உண்மையைக் கிரகிப்பது? மேலும் சிலர் நான் ஏது சொன்னாலும் 'ஆமாம், ஆமாம்' என்று மட்டும் சொல்லி வந்தனரேயன்றி இவர்களிடமும் புது விஷயம் கிரகிக்க முடியவில்லை.

'ஏர்கண்டிஷனர்' வாங்கியவுடன் என் வீடு எப்படி இருக்கும் என்று யோசனை செய்தேன். கற்பனை வெள்ளத்தில் மிதக்க ஆரம்பித்தேன்.

"டேய், ரகு! இந்த மாதம் எலக்ட்ரிக் பில்லைப் பார்த்தியோ? ரூபாய் ஐம்பதுகூட ஆகியிருக்கிறது. உனக்குத் தூங்க மட்டும் தினப்படிச் செலவு இரண்டு ரூபாய் ஆகிறதுடா!" என்று அங்கலாய்த்தார் என் தாயார்.

ஒவ்வொரு நாளும் நான் தூங்கப் போகும் போது என் தந்தை, "டேய், ரகு! சரியா மணி பன்னிரண்டானதும் 'ஏசியை' நிறுத்திவிடு. இல்லேன்னா ரமாவுக்கு (அவர் பேத்தி) ஜலதோஷம் பிடிச்சுடும். ஆமாம், சொல்லிப்புட்டேன்" என்பார்.

"ஏண்டாப்பா, ரகு! இப்படிச் சிலுசிலுன்னு அந்த அறையிலே காத்தடிக்கிறதே, ஒரு ஸ்வெட்டரையாவது போட்டுண்டு படுத்துக்கப்படாதா?" — இது என் பாட்டி.

"இதுதான் டிராயிங் ரூம், இது டிரஸ்ஸிங் ரூம். இது ஸ்டோர் ரூம். இது எங்க பெட்ரூம். ஏர்கண்டிஷண்ட். எங்களுக்கு ஒரு நாள் ஏர்கண்டிஷன் வேலை செய்யலேன்னாலும் தூக்கமே வராது. அதனால், அன்றைக்குத்



நாங்க முதலாட்டம், இரண்டாவது ஆட்டம் ஏதாவது ஒரு ஏர்கண்டிஷண்ட் தியேட்டருக்குப் போயிடுவோம்.'' — இது என் சகதர்மிணியின் ஜம்பப் பேச்சு. இப்படிப் பெருமை யடித்துக் கொள்வதற்கென்றே அவள் தினம் ஒருத்தியாகத் தன் சிநேகிதிகளை அழைத்துக் கொண்டு வருகிறாள்.

இப்படிக் கற்பனை வெள்ளத்தில் மூழ்கி இருக்கையில் டெலிபோன் மணி ஒலித்தது. ''சார், புறப்படலாமா? மணி ஒன்றாகி விட்டது!'' என்று என் உதவியாளர் கேட்டார்.

ஆபீஸை விட்டு நானும் அவரும் வெளியே போகும் போது எங்களை நோக்கின ஆபீஸில் வேலை பார்க்கும் அத்தனை பேரின் ஜோடிக் கண்களும். என் உதவியாளரை நான் டிபன் சாப்பிட அழைத்திருப்பதாக அவர் ஆபீஸில் உள்ளவர்களிடம் அவிழ்த்துவிட்ட புளுகு மூட்டையை நான் எப்படி அறிவேன் ?

ஃ ஃ ஃ

''**நா**ன் இந்த ஏர்கண்டிஷனரைப் பற்றி ஒன்றும் பிரமாதமாகச் சொல்லிக் கொள்ள மாட்டேன். உங்கள் இந்தியாவில் தயாராகும் ஏர்கண்டிஷனர்களின் விலை ரூபாய் இரண்டாயிரத்துக்கு மேல். இது எங்கள் நாட்டில் தயாரானது. நான் இரண்டு வருடங்கள் உபயோகித்திருக்கிறேன். இருந்தாலும் நல்லபடியாக இயங்குகிறது என்றே சொல்வேன்'' என்றார் அமெரிக்கையாக அந்த அமெரிக்கர்.

பேசாமல் ரூபாய் அறுநூற்றை அவரிடம் கொடுத்துவிட்டுக் கிளம்பினேன். அப்போது அவர் மணி என்ற பெயர் தாங்கிய விலாசம் ஒன்றை என்னிடம் கொடுத்தார்.



''இவர்தான் என் ஏர்கண்டிஷனர்களுக்கு மெக்கானிக். இவரையே நீங்கள் உபயோகப்படுத்திக் கொண்டால் இந்த 'ஏசி'யைப் பற்றிக் கவலைப்படாமல் இருக்கலாம். தற்சமயம் ஒரு சில சிறிய ரிப்பேர்களை இதில் செய்ய வேண்டி வரும்'' என்றும் பணத்தை வாங்கிக் கொண்ட பிறகு சொன்னார்.

மேலும் அதே மணியை விட்டே என் வீட்டில் ஏர்கண்டிஷனரைச் சேர்ப்பதாகவும் உறுதியளித்தார்.

மாலை ஆறு மணிக்கு வீட்டுக்குப் போனால் மணி 'ஏசி'யுடன் அங்கே காத்திருந்தார்.

''எங்கே சார், இதைப் பொருத்த வேண்டும் ?''

மாடியிலிருந்த என் படுக்கையறையைக் காண்பித்தேன்.

உதட்டைப் பிதுக்கினார் மணி.

''இந்த ரூமை மாற்றியமைக்க வேண்டும். அப்போதுதான் இந்த ஏசி உங்களுக்கு பிரயோஜனப்படும்'' என்றார்.

அதாவது ரூம் மிகப் பெரியதாம். இந்த 'ஏசி' அவ்வளவுக்குக் குளிர்காற்றைக் கொடுக்க முடியாதாம். ஆகவே கூரையின் உயரத்தைக் குறைத்து மேலே 'தர்மாகோலி



ஸ்' வேண்டுமாம். இதைச் செய்யத் தமக்குத் தெரிந்த ஒருவரை அனுப்புவதாகச் சொன்னார் மணி.

அனுப்பச் சொன்னேன். வேறு வழி.....?

கொண்டு வந்த 'ஏசி'யைத் தம் 'ஒர்க் ஷாப்'புக்கு எடுத்துச் சென்று ரிப்பேர்களைச் செய்து வருவதாகச் சொன்னார் மணி.

''எவ்வளவு ஆகும்?''

''முந்நூறு ரூபாய் ஆகும் சார். ஏனென்றால், காயில்கள் முழுவதையும் மாற்ற வேண்டும். போனது வந்தது எல்லாவற்றையும் பார்த்து 'பெயிண்ட்' அடித்துத் தருகிறேன்'' என்றார்.

பேரம் பேசி இருநூற்று எழுபத்தைந்துக்கு முடித்து அட்வான்ஸாக நூற்றைம்பது ரூபாயையும் கொடுத்து அனுப்பினேன். மணியை விட்டால் வேறு வழி ?

**ம**று நாள் காலையில் வேலு வந்தார், அறையை மாற்றி அமைக்க.

அறையை மாற்றி அமைத்துப் பிரமாதமாகப் பெயிண்ட் அடித்துச் சந்துபொந்துகளை யெல்லாம் அடைத்து ஜன்னல்களுக்கெல்லாம் கண்ணாடி போட்டுக் கதவுக்குத் தானாகச் சாத்தும் 'கில்' வைத்து முடிக்குவதாகச் சொன்னார்.

''ஆகா !'' என்றேன்.

செலவு ஐந்நூறு ரூபாய் ஆயிற்று.

மணி 'ஏசி'யைக் கொண்டு வந்து என் படுக்கை அறையில் போட்டு அதை வேலை செய்யச் செய்த பிறகு வாங்கிச் சென்றது ரூபாய் நானூறு. ஏதோ முக்கியமாக மோட்டாரிலேயே ரிப்பேராம். அவர் என்ன செய்வார்?

# தலைவலியா?

## வேகமாக குணம்பெற 2 அனாசின் சாப்பிடுங்கள்

தலைவலி தாக்கும்போது உங்களுக்குப் படபடப்பும் வாட்டமும் சோர்வும் உண்டாகும். சிடுசிடுப்புடன் அடிக்கடி எரிச்சல் அடைவீர்கள். உடனே 2 அனாசின் சாப்பிட்டுப் பாருங்கள். 4-வழி நிவாரணம் அதி விரைவில் கிட்டும்.

1. தலைவலி நோவைத் தணிக்கிறது அனாசின்—வேகமாக!
2. சோர்வை வெல்லுகிறது அனாசின்—வேகமாக!
3. வாட்டத்தைப் போக்குகிறது அனாசின்—வேகமாக!
4. படபடப்பை ஆற்றுகிறது அனாசின்—வேகமாக!

காரணம், பல மருந்துகள் இணைந்த அனாசின்—டாக்டரே குறித்துக் கொடுத்த மருந்துச் சீட்டுபோல பத்திரமானது. எனவே, வலி தணிக்கும் மற்றெந்த சாதனங்களையும்விட, அதிக மக்கள் அனாசின் உபயோகிப்பதில் வியப்பில்லை.

அடுத்த தடவை தலைவலி வந்தால் அனாசின் சாப்பிடுங்கள். அனாசின் சளி, ஃப்ளு, பல்வலி, உடல்வலி ஆகியவற்றையும் தணிக்கிறது. ஆகையால் எப்போதும் அனாசின் உங்கள் கைவசமிருக்கட்டும்.

தவறாமல் சாப்பிடுங்கள் அனாசின்.

# அனாசின்

**சிறந்தது ஏனெனில் அது**

**4 வழிகளில் வேலை செய்கிறது**



''அப்பாடா !'' என்று அன்றைக்கு ஏசியை முடுக்கி விட்டுவிட்டுப் படுத்தேன். அயல்நாட்டுக் குளுமை வீசக் காணோம். நம் நாட்டுக் குளுமைதான் நிறைந்தது.

இரவு மணி பன்னிரண்டிருக்கும். எனக்கு வெடவெட என்று நடுக்கியது. என்னடா என்று பார்த்தால் ஏசியில் ஏதோ கோளாறு. அதிகமாக அது குளிரை உற்பத்தி செய்தது.

மணி திரும்ப வந்து அதைப் பிரித்துப் போட்டு விட்டார்.

நான்கு நாட்களுக்கு 'ஏசி'யில்லை.

அறையிலிருந்த மின்சார விசிறியையும் அறையை மாற்றியமைத்தபோது பிடுங்கி எறிந்தாகிவிட்டது. 'ஏசி'க்காகச் சந்து பொந்தெல்லாம்கூடக் காற்று வராதபடி அடைத்தாகி விட்டது. எப்படித் தூக்கம் வரும்? வேகாத குறையாக நாலு நாட்கள் படுத்திருந்தோம், அந்த அறையில்.

மறுநாள். திரும்ப 'ஏசி'யைச் சரி செய்தாகிவிட்டது என்று சொல்லி ரூபாய் ஐம்பது பெற்றுப் போனார் மணி.

'ஏசி'யைப் போட்டு அன்று படுத்தோம். மணி பதினொன்று. அறையெல்லாம் ஒரே புகை. குளிர் காற்றுக்குப் பதிலாகப் புகையைக் கக்கியது ஏசி. குடிக்க வைத்திருந்த தண்ணீரைக் கொட்டிப் பெரிய விபத்திலிருந்து தப்பினோம்.

திரும்ப மணியைத் தேடி ஓடினேன்.

ஆயிற்று ஒரு மாதம். ஏசி சரியாக வேலை செய்யக் காணோம்.

வீட்டில் உள்ள அனைவரும் ஒரு கட்சி. நான் தனித்து நிறுத்தி வைக்கப்பட்டேன். வீட்டில் நுழையும் போதே ஏதோ குற்றம் செய்துவிட்டு ஒளியத் தவிக்கும் நினைப்பு. ஒருவரிடம் ஒருவர் சரியாகக்கூடப் பேசிக் கொள்வதில்லை.

கடைசியாக அந்த 'ஏசி'யை விற்றுத் தொலைப்பது என்று முடிவு செய்தேன். என் முடிவை என் உதவியாளரிடம் சொன்னேன். பலரிடம் சொன்னேன்.

தினப் பத்திரிகையில் விற்பனைக்காக விளம்பரம் செய்தேன்.

பலன்? ஒரே ஒருவர் மட்டும் பதில் போட்டார். குளிர்சாதனப் பெட்டியாக (ரெப்ரிஜிரேடர்) மாற்றிக் கொள்வதாக.

ஏமாறுவேனா, மறுபடியும்?

எப்படியோ என் தயவில் லட்சக் கணக்கில் வியாபாரம் செய்து வரும் ஒருவர் தயை கூர்ந்து அதை ரூபாய் ஐந்நூற்றுக்கு வாங்கிக் கொண்டார்.

அப்பா, காலைச் சுற்றின பாம்பு கடிக்காமல் விட்டதே என்று அதைத் தொலைத்து முழு நிம்மதி பெற்றேன்.

எனக்கு மொத்த நஷ்டம் ரூபாய் ஆயிரத்து ஐம்பதும் ஒரு மின்சார விசிறியும். (என் படுக்கையறையில் கழற்றியதை என் மைத்துனன் தனக்கு வெகுமதியாகத் தானே



எடுத்துக் கொண்டு பூனாவுக்குப் போய்விட்டான்.) நஷ்டமான இன்னொரு மிக முக்கியமான பொருள்: என் சொந்தச் சுதந்திரம்.

வீட்டுக்கு வத்திப் பெட்டி வாங்கக்கூட இனி எனக்கு உரிமையில்லை. ஆபீஸ் போகும் போது எனக்குக் கொடுக்கப்படும் ரூபாய் ஐந்தில் பாக்கி போகச் செலவான தொகைக்குக் கணக்கை எழுதிக் கொடுக்க வேண்டிய கொடுமை ஏற்பட்டு விட்டது சுவாமி!

## தெரியுமா?

முயல் தண்ணீர் குடிப்பதில்லை. அதன் தாகத்தைத் தணிக்க அது சாப்பிடும் புல்லில் அடங்கியுள்ள தண்ணீரும், இரவில் பெய்யும் பனி நீருமே போதுமானது.

வயது வந்த யானை ஐந்து மணி நேரம் தூங்கும்.



உலகிலேயே பிற்போக்கான கண்டம் ஆப்பிரிக்கா. ஆனால் அங்குதான் உலகிலேயே அதிகமாகப் பொன்னும் வைரமும் கிடைக்கின்றன.

சுத்தமான நெய்யும், சுத்தமான தேனும் சம அளவில் கலந்தால் அது விஷமாக மாறிவிடும்.

ஒவ்வொரு மனிதனும் ஒரு மாதத்தில் தன் எடையைப் போன்ற ஒன்றரை மடங்கு தண்ணீர் குடிக்கிறான்.

தகவல்: ''ராமன்''

## பசு அதிகப் பால் கறக்கச் சில யோசனைகள்

பால் கறப்பவர்கள் தூய வெள்ளை உடை அணிய வேண்டும். பால் வாளிகளைக் கொண்டு 'தட தட'வென்று சப்தம் செய்ய வேண்டும். இதனால் பசுவின் நரம்பு உணர்ச்சி எழும்பி, ஆக்ஸிடாக்ஸின் என்ற சுரப்பி ஹார்மோன் சுரந்து பாலை அதிகப்படுத்தும். பால் கறப்பவர்கள் இதமான வெந்நீரால் பால் மடியைக் கழுவி, அதைத் துவாலையினால் துடைத்துத் தடவிக் கொடுக்க வேண்டும். இதனால் ஹார்மோன் விடுதலையாகிப் பால் இறங்குகிறது. உடனே விரைவாகப் பாலைக் கறக்க வேண்டும்.

ஆதாரம்: கால்நடை நிர்வாகமும் பால்பண்ணையும்

தகவல்: புங்கைஜமான்



## பறக்கும் கடிதங்கள்

விமானம் மூலம் தபால் அனுப்புவதால் ஜெர்மன் அஞ்சல் துறைக்கு ஓர் இரவுக்கு 61,250 ரூபாய் செலவு ஆகிறது. ஜெர்மன் லுப்தான்சா விமானக் கம்பெனிக்கு அஞ்சல் துறையினர் முக்கிய வாடிக்கைதாரர்களாக இருக்கின்றனர். லுப்தான்சா விமானக் கம்பெனிக்கு ஓர் இரவுக்கு 50,750 ரூபாய் செலுத்தப்படுகிறது. ஒவ்வொரு நாளும் நாற்பது டன் எடை கடிதங்கள் அதா



வது மொத்தம் இருபது லட்சம் கடிதங்கள் விமானங்களின் மூலம் அனுப்பப்படுகின்றன. இவற்றை ஒன்றன்மீது ஒன்றாக அடுக்கி வைத்தோம் என்றால் இரண்டு கிலோ மீட்டர் உயர கோபுரமாக இருக்கும். இவ் விமானங்கள் ஓர் இரவில் 3,600 கிலோ மீட்டர் தூரம் பறக்கின்றன. கடந்த முதல் ஐந்து ஆண்டுகளில் மட்டும் 55 இலட்சம் கிலோமீட்டர் தூரம் பறந்திருக்கின்றன.

## இலட்சியம்!

புக்கர் வாஷிங்டன் என்ற நீக்ரோத் தலைவர் ஒரு சமயம் தென் கரோலினா மாகாணத்தில் பிரசங்கம் செய்ய வேண்டியிருந்தது. ஒரு குதிரை வண்டிக்காரனிடம் சென்று, ''வருகிறாயா?'' என்று கேட்டார்.

அவன் ஒரு வெள்ளைக்கார அமெரிக்கன். ''நான் நீக்ரோக்களுக்கு வண்டி ஓட்டுவதில்லை'' என்று மறுத்தான்.

''அப்படியானால் சரி, நான் உனக்கு ஓட்டுகிறேன்'' என்று சொல்லி வண்டிக்குள்ளே வண்டிக்காரனை உட்கார்த்தி வைத்துத் தாம் வெளியே அமர்ந்து நகர மண்டபத்தை நோக்கி வண்டியைச் செலுத்தினார் புக்கர். விரைவிலே அங்கு போய்ச் சேர வேண்டியதுதானே அவரது இலட்சியம்?

தகவல்: 'ரமன்'

ஆதாரம்: 'அமெரிக்கன் வீக்லி'



பல்சுவைப் பக்கம் 1

## ராஜாஜி சுலோகம்

புகழ்கொண்ட சாகித்ய கர்த்தரான காலஞ்சென்ற மைசூர் ஸ்ரீ வாசுதேவாச்சாரியார் அவர்கள் ராஜாஜியின் மீது இயற்றிய ஓர் அழகிய சுலோகத்தைக் கீழே தருகிறோம்:

ராஜ்ய பாலன சாதுர்ய ஸுவிக்யாத ஸுதீமணி:
ராமம் ச ஜானகிம் த்யாயன் ஜீயாத் ஆசந்த்ர தாரகம்

'நாட்டைப் பாலிப்பதில் திறமை கொண்டவரும், நற்கீர்த்தி பெற்றவரும், நல்லறிஞர்களிடை மணியாக விளங்குபவருமான ராஜாஜி, ராமபிரானையும், ஜானகிப் பிராட்டியையும் தியானித்துச் சந்திரனும் தாரகையும் உள்ளவரையில் வாழ்வாராக' — என்பது இதன் பொருள்.

சுலோகத்தின் இரண்டாம் வரியில் ரா-ஜா-ஜீ என்ற எழுத்துக்களில் பதங்கள் தொடங்குவதன் பொருத்தத்தைக் கவனிக்கவும்.



# குழந்தைகளே நடத்தும் 'ரயில்வே!'

ஒரு சிறுமி டிக்கெட் பரிசோதகர் உடையில் தோன்றி, டிக்கெட் பரிசோதிக்கிறாள். ஒரு சிறு பெண் 'ஸ்டேஷன் மாஸ்டர்' உடையணிந்து வண்டிக்குக் கொடி காட்டுகிறாள்! மற்றும் நான்கு சிறுவர்கள் 'டிக்கெட் பரிசோதகர்' உடையில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கின்றனர். இவர்கள் நாடகம் எதற்காகவும் இப்படி உடை அணியவில்லை. இவர்கள் அனைவரும் ரயில்வே ஊழியர்களே!

மாஸ்கோவின் அருகில் உள்ள 'ஒடிக்' என்ற ரயில் நிலையத்திலிருந்து சுமார் ஐந்து மைல் நீளத்துக்கு ஒரு ரயில்வே போக்கு



வரத்து நடக்கிறது. இந்த ரயில்வேயில்தான் இந்தச் சிறுவர்கள் வேலை செய்கின்றனர். இந்த ஐந்து மைல்களுக்கிடையே மூன்று ஸ்டேஷன்கள் உள்ளன. இந்த ஸ்டேஷன்களின் ஸ்டேஷன் மாஸ்டரும், கார்டும் இந்த ரயில்களின் டிரைவர்கள் டிக்கெட் பரிசோதகர்களும் அனைவரும் சிறுவர்களே! இந்த ரயில்களில் தினமும் சுமார் ஆயிரம் பேர் பிரயாணம் செய்கின்றனர்! இப்படி ஒவ்வொரு ஆண்டும் சுமார் நானூறு சிறுவர்கள் இதில் வேலை செய்கின்றனர். கடந்த முப்பது ஆண்டுகளாக இந்தச் சிறுவர் ரயில்வே நடக்கிறது.





தகவல்: சி. சம்பத்குமார்
மூலம்: சோவியத் யூனியன்

## கொலையாளியே அழுவார்!

ஒரு வெங்காயம் மற்றொரு வெங்காயத்தைக் கேட்டது: "ஆமாம், நாம் இறந்தால் யார் அழுவார்கள் ?"

"வேறு யார் ? நம்மை நறுக்கியவர்கள் தான்" என்றது மற்றொரு வெங்காயம்.



— எறும்பு

# பேத்ருஸ்

## குட்டிக் கதைகள்

தொகுத்தவர்: கு. அழகிரிசாமி

கி. பி. முதல் நூற்றாண்டில் இத்தாலியில் வாழ்ந்தவர் பேத்ருஸ். அவர் லத்தின் மொழியில் செய்யுள் வடிவில் எழுதிய குட்டிக் கதைகள் ஐந்து தொகுதிகளாக வெளிவந்தன. அவை முற்காலத்தில் பள்ளிக்கூடங்களில் பாடப் புத்தகங்களாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளன. ரோமாபுரி சக்கரவர்த்தியையும் மந்திரியையும் அவர் மறைமுகமாகத் தாக்கி எழுதினார் என்ற குற்றச்சாட்டின் பேரில் அவருக்கு ஒருசமயம் அரசாங்கத் தண்டனையும் விதிக்கப்பட்டது.

கிரேக்க ஞானி சாக்ரடீஸ் ஒரு சமயம் தாம் குடியிருப்பதற்கு ஒரு சின்னஞ் சிறு வீடு கட்ட முடிவு செய்து அஸ்திவாரமும் போட்டார். இதைப் பார்த்த ஒருவன், ''புகழ் பெற்ற ஞானியாக இருக்கும் நீங்கள் இவ்வளவு சின்னஞ் சிறு வீடு கட்டுகிறீர்களே!'' என்று ஏளனமாகச் சொன்னான்.

அதற்கு சாக்ரட்டீஸ் கூறிய பதில்: ''இந்தச் சிறிய வீட்டை நிரப்புவதற்கே எனக்கு உண்மையான நண்பர்கள் கிடைக்க மாட்டார்களோ என்று ஏங்குகிறேன்.''



■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■

சிமோனிடீஸ் என்ற கவிஞர் ஆசிய நாடுகளின் நகரங்கள் பலவற்றுக்கும் சென்று அரசவைகளில் பாடி ஏராளமான பரிசில்கள் பெற்றுத் தம் தாய்நாடான சியோஸ் தீவுக்குக் கப்பலில் திரும்பி வந்துகொண்டிருந்தார். அவருடன் அதே கப்பலில் வேறு பல பிரயாணிகளும் விலை உயர்ந்த பொருள்களோடு வந்து கொண்டிருந்தார்கள். ஒருநாள் திடீரென்று பயங்கரமான புயற்காற்று வீசவே, கப்பல் கவிழத் தொடங்கியது. அப்போது எல்லாப் பிரயாணிகளும் தங்கள் பொருள்களை எடுத்துக் கொண்டு கடலில் நீந்திப் பக்கத்தில் உள்ள ஒரு நகரத்தில் போய்க் கரையேறத் தீர்மானித்தார்கள். ஆனால் கவிஞர் மட்டும் எந்தப் பொருளையும் எடுத்துக்கொள்ளாமல் கடலில் குதிக்கப் போனார். அப்பொழுது ஒரு பிரயாணி அவரைப் பார்த்து, ''உங்கள் மூட்டைகளை நீங்கள் ஏன் எடுத்துக் கொள்ளவில்லை?'' என்று கேட்டான்.

''என் மூட்டைகளில் விலைமதிப்புள்ள பொருள்கள் ஏராளமாக இருக்கின்றன என்பது உண்மைதான். ஆனால் அந்தச் செல்வங்களை நான் பொருட்படுத்தவில்லை. என் உண்மையான செல்வம் என் உள்ளத்திலேயே இருக்கிறது'' என்று சொல்லிவிட்டுக் கவிஞர் கடலில் குதித்து விட்டார். கவிஞரை ஒரு பைத்தியக்காரன் என்று நினைத்து எல்லாரும் சிரித்தார்கள்.

எல்லாப் பிரயாணிகளும் நீந்திக் கரை சேர முயன்றபோது, கடற் கொள்ளைக்காரர்கள் வந்து அவர்களுடைய செல்வங்களைக் கொள்ளையடித்துக் கொண்டு போய் விட்டார்கள். பல பிரயாணிகள் நீந்த முடியாமல் கடலில் மூழ்கி இறந்தார்கள். கவிஞரும் ஒருசில பிரயாணிகளும் மட்டுமே கரை சேர்ந்து நகருக்குள் போனார்கள். அந்த நகரில் வாழ்ந்த ஒரு பிரபு பெரிய கல்விமானாகவும் இருந்தார். அவரிடம் போய்ச் சேர்ந்தார் கவிஞர். அவர் பெயரைக் கேள்விப்பட்டதுமே பிரபு அளவிட முடியாத மகிழ்ச்சியோடு அவரை வரவேற்று ராஜோபசாரம் செய்தார். சிமோனிடீஸ் இயற்றிய அநேக கவிதைகள் அந்தப் பிரபுவுக்கு ஏற்கனவே மனப்பாடமாகத் தெரியும். கவிஞருக்குப் பொன்னும் பொருளுமாக அள்ளிக் கொடுத்தார் பிரபு. மறுநாள் தெரு வழியாக நடந்து வந்த கவிஞர், தம்மோடு நீந்திக் கரை சேர்ந்த பிரயாணிகள் பிச்சை எடுத்துக் கொண்டிருப்பதைப் பார்த்தார். அப்போது, கவிஞர் அவர்களைப் பார்த்து, ''என் செல்வம் அழியாதது; என் உள்ளத்திலேயே இருப்பது. இப்படி நான் சொன்னதைக் கேட்டு நீங்கள் சிரித்தீர்கள். இப்பொழுது என்ன ஆயிற்று? அழியக் கூடிய செல்வத்தைத் தூக்கிக் கொண்டு வர முயன்றீர்களே, இன்று உங்கள் நிலை என்ன?'' என்று கேட்டார்.



கவிஞரின் செல்வம்

■ ■ ■ ■ ■ ■ ■ ■ ■

ஒரு சிறு தண்ணீர்க் குட்டையில் ஒரு குதிரை தினமும் சென்று தாகத்தைத் தணித்துக்கொள்வது வழக்கம். ஒரு நாள் ஒரு

## முட்டாள் குதிரை



காட்டுப் பன்றி வந்து குட்டையில் விழுந்து புரண்டு, தண்ணீரை யெல்லாம் கலக்கிச் சேறாக்கி விட்டது. இதைப் பார்த்த குதிரை, ''ஏன் தண்ணீரை இப்படிக் கலக்கிச் சேறாக்கினாய்? உன்னை என்ன செய்கிறேன் பார்'' என்று கோபத்தோடு சொல்லிவிட்டு அவ்விடத்தை விட்டுச் சென்றது. காட்டில் ஒரு மனிதனைப் பார்த்துப் பன்றியின் அக்கிரமத்தைப் பற்றிச் சொல்லித் தனக்கு உதவி புரியும்படி கேட்டுக் கொண்டது குதிரை. அவனும் அதற்குச் சம்மதிக்கவே, குதிரை அவனைத் தன் முதுகில் ஏற்றிச் சுமந்து கொண்டு குட்டைக்கு வந்தது. மனிதன் குதிரையின் மீது இருந்தவாறே பன்றியை வேட்டையாடிக் குத்திக் கொன்றான். பிறகு குதிரையைப் பார்த்து, ''நான் இதுவரையில் குதிரை மீது ஏறியதே கிடையாது. இப்பொழுதுதான் தெரிகிறது, சவாரி செய்வதற்கும் வேட்டையாடுவதற்கும் நீ எவ்வளவு உபயோகமுள்ள பிராணி என்று. இனிமேல் நீதான் எனக்கு வாகனம்'' என்று சொல்லி, அதற்குக் கடிவாளம் போட்டுத் தன் வீட்டுக்கு ஓட்டிச் சென்றான்.

குதிரை துயரம் தாங்காமல், ''ஐயோ! நான் எவ்வளவு முட்டாள்தனமான காரியத்தைச் செய்து விட்டேன். ஓர் அற்ப விஷயத்துக்காகப் பழி வாங்க நினைத்து அடிமைத் தளையில் அகப்பட்டுக் கொண்டு விட்டேனே'' என்று அழுதது.

## புறாவும் நரியும்



**கா**ட்டில் ஓரிடத்தில் ஒரு புறா உட்கார்ந்து கொண்டிருந்தது. அதைப் பார்த்த ஒரு நரி எட்ட நின்றுகொண்டு, ''புறாவே! நீ எவ்வளவு அழகாக இருக்கிறாய்! உன்னுடைய நிறத்தையும், உன் உடம்பின் அழகிய அமைப்பையும், உனக்கு அலகும் கண்களும் அமைந்திருக்கும் அழகையும் என்னவென்று சொல்வேன்! உன்னுடைய வனப்புக்கு ஈடு உண்டா? இணை உண்டா?'' என்றெல்லாம் புகழ்ந்துவிட்டு, ''நீ இப்பொழுதே இவ்வளவு அழகாக இருக்கிறாயே! நீ கண்களை மூடித் தூங்கினால் எவ்வளவு அழகாக இருப்பாய்!'' என்று சொன்னது.

புகழுரையில் மயங்கிவிட்ட புறா, ''இதோ தூங்குகிறேன், பார்'' என்று சொல்லிக் கண்களை மூடித் தூங்குவது போல் பாவனை செய்தது. அந்தச் சமயம் பார்த்து நரி ஓசைப்படாமல் ஓடிப் புறாவைக் கவ்விப் பிடித்துக் கொண்டது.

வஞ்சக வலையில் வீழ்ந்து விட்டதை உணர்ந்துவிட்ட புறா, ''நரியே! என் அழகை நீ வருணித்தாயே, அது என் உள்ளத்தைப் பரவசப்படுத்திவிட்டது. இன்னொரு முறையும் அந்த வருணனையை என் காது குளிரக் கேட்க வேண்டும் என்று எனக்கு ஆசையாக இருக்கிறது. ஒரு முறை வருணிக்க மாட்டாயா?'' என்று கேட்டுக் கொண்டது.

நரி வாயைத் திறந்து பேச முயன்றதும், புறா அதன் பிடியிலிருந்து தப்பிப் பறந்து விட்டது.

## மரமும் பட்டையும்

நமது சமூக ஆசாரங்களிலும் பழக்க வழக்கங்களிலும் எத்தனையோ தீமையான அம்சங்கள் இருக்கின்றன. அவைகளை மாற்ற வேண்டியதுதான். ஆனால் அதற்காக அந்த ஆசாரங்களையும் பழக்க வழக்கங்களையும் ஏற்படுத்திய நமது முன்னோர்களைக் குறை கூற வேண்டியதில்லை. அந்தக் காலத்தில் அவைகளுக்கு ஏதோ உபயோகம் இருந்திருக்கலாம். தற்போது அவை நமக்கு விளங்கவில்லை என்றால் அதற்காக முன்னோர்களை மூடர்கள் என்று சொல்லக் கூடாது.

மரங்களுக்கு மேலே பட்டை இருக்கிறது. மரங்கள் ஜீவித்திருப்பதற்கும் வளர்வதற்கும் அந்தப் பட்டை மிகவும் அவசியம். ஆனால் மரம் முதிர்ச்சி யடைந்து வெட்டிய பின்னர் கட்டட வேலைகளுக்கு உபயோகப்படுத்தும்போது தச்சன் முதலில் பட்டையைத்தான் செதுக்கி எறிகிறான். அப்போது பட்டைக்கு எவ்வித உபயோகமும் இல்லை. ஆகையால் மரத்துக்குப் பட்டையே வேண்டியதில்லை என்று சொல்லி விடலாமா? பட்டையில்லாமலே மரத்தை வளர்த்திருக்க வேண்டும் என்று அந்தத் தச்சன் மரம் வளர்த்தவனைத் திட்டினால் அவனை மூடன் என்று சொல்ல மாட்டோமா?

— ராஜாஜி

# நாடு செழிக்க நல்லுதவி



நம் நாட்டின் முக்கிய தொழிலாக விவசாயம் அமைந்து அதுவே நாட்டின் வளர்ச்சிக்கு அடிப்படையாக விளங்குகிறது.

''உற்பத்தியைப் பெருக்குவோம்'' என்ற நம்முடைய இன்றைய குறிக்கோளுக்கு விவசாயம் மிக மிக முக்கியமான பங்கு வகிக்கிறது. நாட்டை வளப்படுத்தும் வகையில் விவசாயம் முதலிடம் பெறுகிறது.

கடந்த அறுபது ஆண்டு காலமாக கூட்டுறவு மூலமாக வியக்கத்தக்க அளவில் நாட்டின் வளர்ச்சிக்கு விவசாய தொழில் உதவி யிருக்கிறது.

கூட்டுறவு இயக்கத்தின் மூலமாக நாட்டின் வளர்ச்சியில் பங்கு கொள்வதே எங்கள் லட்சியம். நாடு செழிக்க உதவும் இந்த நற்பணியில் எங்களுக்கு உள்ள பொறுப்பை முற்றிலும் அறிந்தே நாங்கள் சேவை செய்கிறோம்.

**சென்னை மாநில கூட்டுறவு வங்கி லிமிடெட்**

**271, அங்கப்ப நாயக்கன் தெரு, சென்னை - 1**

**THE MADRAS STATE CO-OPERATIVE BANK LTD.**

**271, ANGAPPA NAICK STREET, MADRAS-1.**




- என்னே, அவமானம்!
- மணக்கும் பூவிதழ்கள்
- எலிகளின் பிரயாணம்
- உள்ளது உள்ளபடி
- போக்குவரத்துக் குறை

கல்கி 26–11–67 இதழில் பிரசுரமாகியுள்ள ''மலானி எழுதுகிறார்'' என்ற உப தலையங்கத்தைப் படித்ததும், சர்வதேச நல்லுறவின் புனிதத் தன்மையையும், உத்தம நட்புகளின் ஆதரவையும் எப்படிக் கேலிக்கூத்தாக்குகிறது சர்க்கார் என்ற மன வருத்தமே ஏற்படுகிறது. 'நம்மை நம்மாலேயே தவிர வேறு எவராலும் அவமானப் படுத்திவிட முடியாது' என்றார் ஜே. ஜி. ஹாலண்டு என்ற அறிஞர். இந்திய சர்க்காரின் இந்தச் செயல் இதைத்தான் செய்திருக்கிறது என்று எண்ணும் போது நமது வருத்தம் அதிகமாகிறது.

சென்னை–43 இரா. பாலாஜி

லட்சுமி சுப்பிரமணியம் எழுதிய ''பூவிதழ்கள்'' ஓர் அருமையான கருத்துக் கொண்ட கதை. இந்தியாவில் பிறந்த அனைவரும் ஒரு தாயின் மக்கள் என்பதனை வலியுறுத்தும் வண்ணம் கடைசி மூன்று பத்திகளில் பூவென்பது பல இதழ் கொண்டு தான் மணம் பரப்பி அழகுற இருக்க முடியும் என்று அவர் குறிப்பிட்டுள்ளார். பிரித்துப் பேசி வெறுப்பை வளர்க்கும் கூட்டத்தினர் இதை உணர்ந்து மனிதாபிமானத்துடனும், அன்புடனும் நடப்பார்களேயானால் இந்தியா என்ற பூ மக்கள் என்ற வண்ண இதழ்களை மலர்த்தி மணம் கமழ்ந்து தேன் சிந்தி, அயலார் வியக்க, அழகுற விளங்கும்.

திண்டுக்கல் அ. இராமச்சந்திரன்

தாங்கள் 19–11–67 தேதி இதழில் எலிகளைப் பற்றிச் சில சுவையான குறிப்புகளைக் கொடுத்திருக்கிறீர்கள். உணவு தேடும்போது எலிகள் இடத்தை விட்டு 180 மீட்டருக்கு மேல் செல்வது கிடையாது என்ற விவரத்துக்கு எது ஆதாரமோ தெரியவில்லை. பம்பாயிலுள்ள ஹாப்கின் நிலைய ஆராய்ச்சியாளர்களின் கணக்குப்படி எலிகள் நான்கு மைல்களுக்கும் மேலாக வரப்புகள், ஆறுகள், ரயில் தண்டவாளங்கள் ஆகியவற்றைக் கடந்து சென்று உணவு தேடி மீண்டும் இருப்பிடத்துக்கே வந்துள்ளன என்று தெரிகிறது.

உலக ஆரோக்கிய நிறுவனத்தின் கணக்கின் படி வருடந்தோறும் சேமிக்கப்பட்ட உணவுத் தானியங்கள் சுமார் மூன்றரைக் கோடி டன்கள் எலிகளால் சேதமாக்கப்படுகின்றன என்றும் பயிர்களில் இருபது சதவிகிதம் எலிகளால் உண்ணப்படுகின்றன என்றும் அறிகிறோம். வருடத்தில் ஓர் எலி சுமார் 27 பவுண்டு உணவைச் சாப்பிடுமானால் பல கோடி எலிகள் மலிந்துள்ள நம் பாரதத்தில் எலிகள் சாப்பிடும் உணவு தானியங்களின் மதிப்பு பல கோடி ரூபாய்களாகும். சிறியதும் பெரியதுமாக எழுபது வகை எலிகள் நம் நாட்டிலே காணப்படுகின்றன.

ஹைதராபாத்–8 கே. ராமமூர்த்தி

கல்கி 12–11–67 இதழில் வந்த 'எங்கும் சு. க. என்பதே பேச்சு' என்ற கட்டுரை சிந்தனையைத் தூண்டும் சிறந்ததொரு கட்டுரை. நன்கு ஆழ்ந்து சிந்தித்து எழுதப்பட்டிருக்கிறது. காரணம் எங்கோ இருக்க, காரியத்தைத் தடுக்க முயல்வது எத்தனை தவறு—நியாய தார்மீக முறையில்—என்பது அழகாக எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது. பெரியவர்கள் எல்லாம் தைரியமாக எடுத்துச் சொல்லத் தயங்குவதைக் கட்டுரையாசிரியரான தங்கள் நிருபர் சிறிதும் அச்சமின்றிப் பச்சையாகப் பிட்டு வைக்கிறார். உள்ளதை உள்ளபடி, அதாவது உள்ளத்தில் உள்ள கோளாறுகளையும் கெடுதிகளையும் எடுத்துக் காட்டுவதும் பெரிய சேவைதான்.

புதுதில்லி வி. என். சுப்பாராவ்

எண்ணூரிலும் அதனை அடுத்துள்ள காமராஜ் நகர், தாழங்குப்பம், நெட்டுக்குப்பம், காசிகோயில் குப்பம், எரணாவூர் குப்பம், பர்மா நகர் ஆகிய இடங்களிலும் உள்ள பள்ளிகளில் திருவொற்றியூரிலிருந்தும், காலாடிப்பேட்டை, விம்கோ ஆகிய இடங்களிலிருந்தும் வேலைக்குச் செல்லும் ஆசிரியர்களும், ஆசிரியைகளும் இருக்கிறார்கள். எங்களுக்குக் காலை பள்ளி நேரம் 8.45. அந்த நேரத்துக்குப் பள்ளிக்குப் போக பஸ்கள் கிடைப்பதில்லை. காரணம், காலையில் எண்ணூரிலுள்ள தொழிற்சாலைகளில் பணிபுரியும் தொழிலாளர்கள் நிறைந்து எங்கும் நிற்காமல் செல்கிறது 56-ஏ பஸ். அந்த நிலையில் நாங்கள் 8 மணியிலிருந்து 9–30 மணி வரை நிற்க வேண்டியிருக்கிறது. மூன்று நாட்கள் தாமதமானால் ஒரு நாள் சம்பளம் பிடிக்கப்படுகிறது. தினமும் இரண்டு ரூபாய் கொடுத்துக் குதிரை வண்டிகளில் செல்லும் வசதி படைத்தவர்கள் அல்லர் ஆசிரியர்கள். நடந்தும் போக முடியாது. இந்த நிலையில் அல்லல்படுகிறோம். அதனால் ஏதாவது வசதி செய்து தரத் தமிழக அரசாங்கம் முன்வர வேண்டும்.

திருவொற்றியூர் ஆசிரியர்கள் சார்பில்,
29–11–67 டி. எஸ். ராஜாமணி

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam

# பாண்ட்ஸ்

ட்ரீம்ஃப்ளவர்
ஃபேஸ் பவுடர்




**சொப்பன
சுந்தரியின்
வதனப் பொலிவை
உங்களுக்கு அளிக்கும்!**

பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் ஃபேஸ் பவுடர் சீராகப் படிந்து முகத்திலுள்ள சிறு குறைகளை மூடி மறைக்கிறது...முகத்தைப் பளிச்சென்று வைக்கிறது! உங்கள் சரும நிறத்திற்கேற்றபடி தேர்ந்தெடுக்கப் பலவித வண்ணங்களில் கிடைக்கின்றது.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ. யில் இணைக்கப்பட்டது)

P.5769

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி